மின்னும் மேனி
மெருகுக்கு ரெக்ஸோனா




மின்னி மிளிரும் மேனி... என்னாளும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவை யான ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

**ரெக்ஸோனா** உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைத்திருக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 84 2012 TM

# என்ட்ரன்ஸ் எக்ஸாம்



பொறி இயல், மருத்துவக் கல்லூரிகளுக்கு மட்டுமென்ன இந்த இதழுக்குள் புகுவதற்கு முன்பு ஒரு நுழைவுத் தேர்வு எழுதித்தான் ஆகவேண்டும் நீங்கள்! சரி என்று தோன்றுகிற விடையைடீ 'டிக்' பண்ணுங்கள். பிறகு சரியான விடைகளுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். 50 சதத்துக்குக் குறைவாக மார்க் வாங்கி ஃபெயில் ஆனாலும் பாதகமில்லை. இந்த இதழுக்குள் அட்மிஷன் உண்டு! எல்லாக் கேள்விகளுக்கும் சரியான விடை அளித்தால் உங்களுக்கு டாக்டராகும் ஆர்வம் நிறையவே இருப்பதாக அர்த்தம்!

1. சிறுநீரகத்தில் கற்கள் எப்படி உண்டாகின்றன?
   அ) சாப்பிடும் போது சிறுசிறு கற்கள் உணவோடு கலந்து உள்ளே போய் விடுவதால்.
   ஆ) கொழுப்புச்சத்து இறுகிக் கட்டியாகி விடுவதால்.
   இ) உடலில் உள்ள சில தாது உப்புக்கள் சில நேரங்களில் கற்களாக மாறி விடுவதால்.

2. குளிர்ந்த நீரில் குளித்தால் இந்த நோய் குணமாகிவிடும்.
   அ) காய்ச்சல்
   ஆ) சாதாரணத் தலைவலி
   இ) வயிற்றுப் போக்கு.

3. புற்றுநோய் என்பது எதனால் ஏற்படுகிறது?
   அ) செல்களின் வளர்ச்சி ஒரு குறிப்பிட்ட உடல் பகுதியில் தேவைக்கு அதிகமாக வளர்வதால்.
   ஆ) மூளை வளர்ச்சி பாதிப்பதால்.
   இ) இரத்த ஓட்டம் வேகமாவதால்.

4. கண்டிப்பாக எவ்வளவு மணி நேரம் ஒருவர் தூங்கியாக வேண்டும்?
   அ) பத்துமணி நேரம்
   ஆ) ஆறு மணி நேரம்
   இ) ஒருநாள் இரண்டுநாள் தூங்கமுடியாவிட்டால் கூட ஒன்றும் தப்பு இல்லை.

5. தாய்ப்பால் ஊட்டும் போது குழந்தையை மடியில்,
   அ) சாய்வாக வைத்துக் கொள்ள வேண்டும்.
   ஆ) படுக்க வைத்துக்கொள்ளவேண்டும்.
   இ) உட்கார வைத்துக் கொள்ள வேண்டும்.

6. 'கெராட்டோப் பிளாஸ்டி' என்றால் என்ன?
   அ) ஒருவகையான ஒட்டு வில்லை.
   ஆ) காரட்டிலிருந்து செய்யும் ஒரு மருந்து.
   இ) இறந்தவர்களின் உடலிலிருந்து எடுத்தவிழியின் கறுப்புவட்டத்தைப் பார்வை இழந்தவர்களுக்குப் பொருத்திப் பார்வை தரும்சிகிச்சை முறை.

7. விட்டிலிகோ எனப்படும் வெண்குஷ்டம் எதனால் ஏற்படுகிறது?
   அ) சருமத்தின் நிறத்தை உண்டாக்கு கிற நிறமிகள் வளர்ச்சியடையாததால்.
   ஆ) இரத்தம் கெட்டுப் போவதால்.
   இ) நீரிழிவு நோயினால்.

8. எண்ணெய் தேய்த்துக் கொள்வதால்,
   அ) ஒரு பயனும் இடையாது.
   ஆ) உடம்பின் சூடு தணியும்
   இ) கண் பார்வை கூர்மையாகும்.

9. மாண்டோ டெஸ்ட் என்பது எந்த நோயைக் கண்டறியச் செய்யப்படுகிறது.
   அ) சீதபேதி
   ஆ) காசநோய்.
   இ) டைபாய்டு.

10. பிறந்த அன்றே குழந்தைக்கு உணவுக்காகச் சர்க்கரை கலந்த தண்ணீரைத் தருவது.
   அ) தவறானது.
   ஆ) குழந்தைக்கு நோய் வராமல் தடுக்கும்.
   இ) ரத்தத்தைச் சுத்தம் செய்யும்.

சரியான விடை:

1. (இ) 2. (ஆ) 3. (அ) 4. (இ). 5. (அ) 6. (இ) 7. (அ) இது ஒரு நோயே அல்ல. 8. (அ). மனாறில் கிடைக்கும் பலன் தான் கிடைக்கும். 9. (ஆ) 10. (அ) எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் தாய்ப்பாலைத் தான் தரவேண்டும்

தொகுப்பு: வெண்பால்

# வீட்டு வசதி வாரிய

சமீபத்தில் கல்கிக்கு வந்த இரு கடிதங்கள்:

''...மாதா மாதம் அறுபது ரூபாய் பராமரிப்புச் செலவாக (Maintenance Charges) வீட்டு வசதி வாரியத்திற்கு அழுகிறோம். ஒரு வருஷமாக மின்சார கட்டண பில் வரவில்லை. வீட்டின் மேல் மாடி ஒழுகுகிறது. மேலே உள்ள தண்ணீர்த் தொட்டியும் ஒழுகுகிறது. யாரிடம் சொல்வது? என்ன செய்வது? கண்ணீர் தான் மிச்சம்!''

—சௌதாமினி பாலகிருஷ்ணன், அண்ணா நகர் மேற்கு.

○ ○ ○

கொரட்டூர் ஹவுஸிங் போர்டு மார்ச் இரண்டாவது வாரத்தில் வீடுகளை ஒதுக்குவதில் சீட்டு குலுக்கியதில் எனக்கும் அதிர்ஷ்டம் அடித்தது. முன் பணமாக 41,000 ரூபாய் மார்ச் 31–ம் தேதிக்குள் கட்டியும் வீட்டை இன்னும் என் வசம் ஒப்புவிக்கவில்லை. ஆனி, ஆடி மாதங்களில் புது வீட்டுக்குப் போகக் கூடாது. கடிதங்கள்மூலம் பல முறை முறையிட்டும் பயனில்லை.

மேற்கு மாம்பலம்,
டி. எஸ். சுப்பிரமணியம்.

○ ○ ○

வீட்டு வசதி வாரியத்தைக்குறைகூறி இப்படிப்பட்ட கடிதங்கள் ஏராளமாகப் பத்திரிகைகளில் வெளிவருகின்றன. ஏன் இந்த நிலை? இதை மாற்றவே முடியாதா?

1961ல் நகர அபிவிருத்தி டிரஸ்ட் என்ற பெயரில் ஆரம்பித்த நிறுவனம் தான் நாளடைவில் வீட்டு வசதி வாரியமாகப் பெயர் மாற்றப் பட்டது. No profit, No loss என்ற நோக்கத்தில் ஆரம்பிக்கப்பட்டு, செயல்படுவதாகச் சொல்லப்பட்டாலும் மக்களிடம் கொள்ளையடிக்கும் பணத்திற்குக் கணக்கில்லை. இது வீடு கட்டுவதற்கு நில ஆர்ஜிதம் செய்வதிலிருந்தே ஆரம்பமாகிறது.

○ ○ ○

ஒரு இடத்தில் 200 வீடுகள் கட்ட நிலம் தேவைப்படுவதாக வீட்டு வசதி வாரியம் கணக்கிட்டால், அந்த இடத்தை ஏற்கெனவே யாராவது வைத்திருந்தாலும், சட்டப்படி வாரியத்திடம், அது தரும் பணத்தைப்பெற்றுக் கொண்டு விற்று விட வேண்டும். நிலத்தின் சொந்தக்காரர்கள் சிலர், தங்கள் நிலத்தைப் பிற்காலத்தில் நல்ல விலைக்கு விற்றுச் சம்பாதிக்கக் கருதி வீட்டு வசதி வாரியத்திடம், 'எங்கள் நிலத்தை நாங்கள் தர இயலாத நிலையில் இருக்கிறோம்' என்று மனுவைத் தருவார்கள். ஆனால் வாரியமோ, 'நாங்கள் ஆர்ஜிதம்' செய்வோம் என்று மிரட்டும். அந்த மிரட்டலெல்லாம் கடிதத்தில்தான். பின்னால் சம்பந்தப்பட்டவர்களிடத்தில் சென்று பேசி, தள்ள வேண்டியதைத் தள்ளினால் சம்பந்தப்பட்ட நிலங்களுக்கு எந்த ஆபத்தும் வராது. சென்னையில் வளசரவாக்கத்தில் உள்ள ஒரு ஆலையின் இடம் இப்படித் தப்பித்தது தான்.

சென்னை வடபழனியில் புதிய காலனி ஒன்று உருவாகி வருகிறது. தனி நபர் ஒருவர் lay out போட்டு மனைகளை விற்றுத்

○ இதுபோல தகராறு வந்து நிற்கிறவை நிறைய....



நன்றிக் கொண்டிருக்கிறார். இதில் வேடிக்கை என்ன வென்றால் இந்தப் புதிய காலனி உருவாகும் இடத்தை வாரியம் ஏற்கெனவே ஆர்ஜிதம் செய்திருக்கிறது. இந்த lay out — டிற்கு எப்படி அனுமதி கிடைத்தது என்பது ஆச்சரியமான ஒன்று!

• • •

இதோ இன்னொரு வகையான கொள்ளை: ஒரு திட்டத்தில் வீடுகள் கட்டும் போது பார்க்குகள், பள்ளிகள், கடைகள் போன்றவற்றிற்கு இடம் ஒதுக்க வேண்டும். வீட்டு வசதி வாரியம் நிலங்களை விற்கும் போது வேண்டியவர்கள் பெருக்குக் குறுக்க



○ பலருக்கும் பலவழிகளில் வசதிசெய்து கொடுக்கும் வாரிய அலுவலகம்

# விவகாரங்கள்

யில் கிடைத்திருக்காது. அவர்களுக்கு எப்படியாவது நிலத்தை வழங்கியாக வேண்டுமே! ஏற்கெனவே பெற்றுக் கொண்ட பணத்திற்கு ஏதாவது செய்தாக வேண்டுமே! எப்படி? லே—அவுட்டில் தான் பார்க்குகள் இருக்கும். நேரே சென்று பார்த்தால் அந்த இடத்தில் யாராவது வீடு கட்டிக் கொண்டிருப்பார்கள். ஈரோட்டிலும், சென்னை அசோக் நகரிலும் இது நடந்திருக்கிறது.

• • •

ஒரு வழியாக நில ஆர்ஜிதம் செய்யப்பட்டு வீடுகள் கட்ட ஆரம்பிக்கும் சூழ் நிலையில், விளம்பரங்கள் வரும். மக்கள் அலைமோதி மனுவைப் பெற்றுக் கொண்டு நம்பிக்கையோடு போடுவார்கள். M.I.G.யோ அல்லது எந்தவிதமான கட்டிடமோ, முதலில் அறிவிப்பது ஒரு தொகையாக இருக்கும். பிறகு கட்டிடம் கட்டி முடிக்கும் தறுவாயில் அது உயர்த்தப்படும் — அல்லது தவணை முறையில் பணம் கட்டும் போது இந்த உயர்த்திய விலை தெரிவிக்கப்படும். இதுபற்றி கேட்டால் tentative cost தான் குறிப்பிட்டோம் என்பார்கள். tentative என்பதற்கு கால வரையறையே கிடையாதா? வீட்டு வசதி வாரியத்தின் இந்தச் செயலால் பல நடுத்தர குடும்பத்தினர் அழுது கொண்டே தவணைகளைக் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். ஒருவீட்டைக் கட்டும் முன்பே, இதை இவ்வளவு காலத்தில் கட்டி முடிப்போம், இதற்கு இவ்வளவு செலவாகும், என்று திட்டமிட்டுப் போடப்படுவதுதானே எஸ்டிமேட்? அந்த எஸ்டிமேட்டிலேயே ஐந்து சதவீதம் உபரியாக வைத்துத்தான் போடுவார்

○ பாரதிதாசன் காலனி



கள். ஆனால் கட்டி முடிக்கும் போது விலை எக்கச்சக்கமாக ஏறிவிடும். என்ன காரணம்? இத்தனைக்கும் ஒப்பந்தக்காரர்களுக்கு (காண்ட்ராக்டர்களுக்கு) இரும்பையும், சிமெண்டையும் வாங்கிக் கொடுப்பது வாரியம்தான். குறித்த காலத்தில் இவர்கள் இந்தப் பொருட்களைவாங்கி கொடுக்காதது மட்டுமல்லாமல் ஒப்பந்தக்காரர்களுக்கு ஒவ்வொரு கட்டடத்திலும், பணத்தைத் தருவதில் கால தாமதம் செய்வது தான் கட்டிடத்தின் மதிப்பை உயர்த்த வழி செய்கிறது. குறிப்பிட்ட கட்டிடம் கட்ட இத்தனை மூட்டை சிமெண்ட் தேவைப்படும் என்றால், அதை வாங்கிக் கொடுக்கும் போதே ஒப்பந்தக்காரர்களிடம் 'இந்த மூட்டை மட்டும் எடுத்துக்கோ. மத்ததை வெளியிலே வித்து விடு' என்று சொல்லும் வாரிய அதிகாரிகள் இருக்கிறார்கள். வீட்டு வசதி வாரியத்தில் 'செல்கிரீட்' கற்களை எங்களுக்கு வீடு கட்டத் தர வேண்டாமென்று ஒப்பந்தக்காரர்கள் சொல்வதன் நோக்கம் — செங்கற்களை அடுக்கினால், சிமெண்ட் தேவைகளை அதிகமாகக் காட்டலாம், தாமும் கொள்ளையடிக்கலாம்,வாரிய அதிகாரிகளையும் மகிழ்விக்கலாம் என்ற எண்ணத்தில் தான் என்ற கருத்து நிலவுகிறது.

மேலே கான்கிரீட் கூரை (R.C.C.) போடும்போது இரும்புக்கம்பிகளைப் பின்னி வைத்திருப்பார்கள். சில கம்பிகள் சரியான படி கட்டப்படாமலேயே இருக்கும். கலவை போடும் போது கட்டப்படாத கம்பிகள் உருவப்பட்டு 'அபேஸ்' செய்யப்படுகிறது. இதனால் தான் பல வீடுகள் ஒழுகுகின்றன.

கடைகள், வீடுகள் போன்றவற்றை கட்டிமுடிக்கும் போது கட்டாயம் திருத்தப்பட்ட எஸ்டிமேட் போட்டே அந்த வேலைகளை முடிப்பார்கள். இந்த வேலைகளில், செய்யாத காரியத்துக்கெல்லாம் சேர்த்து ஒப்பந்தக்காரர் பணம் கொள்ளையடிக்க வழி இருக்கிறது. முப்பதாயிரம்மதிப்பிட்ட கடைகள், எல்லாம் கட்டி முடிக்கப்பட்டபின் எழுபதாயிரம் ஆகிஇருக்கின்றன. சரி இவ்வளவு செலவு செய்ததாகச் சொல்லிக் கடைகளை மக்களுக்கு ஏலம் விடுகிறார்களே! அதையாவது சீக்கிரம் செய்கிறார்களா! ஈரோட்டில் இரண்டு வருடங்களுக்கு முன் கட்டி முடிக்கப்பட்ட கடைகள் அலுவலகங்கள் இன்னும் வாடகைக்கு விடப்படவில்லை.

சென்னை கே. கே. நகரில் வாரியம் சொன்ன எல்லா வேலைகளையும் ஒழுங்காகச் செய்து முடித்த பின்னரும், பணத்தைத் தராத படியால், ஒப்பந்தக்காரர் வீடுகளைப் பூட்டிச் சாவிகளை எடுத்துக் கொண்டு சென்று விட்டார். சம்பந்தப்பட்டவர்களை ஒப்பந்தக்காரர் சரியானபடி 'கவனிக்காததால்' தான் இந்த நிலை ஏற்பட்டிருக்கிறது என்று வாரிய ஊழியர்களேசொல்கிறார்கள். இதனால் பாதிக்கப்படுவது பொது மக்கள் தானே. கிட்டத்தட்ட இரண்டு வருடங்கள் ஆகின்றன. இந்தப் பிரச்னைக்கு முடிவே தெரியவில்லை.

• • •

ஒரு திட்டத்தில் நூறு வீடுகள் இருந்தால், அதிலும் கோட்டா முறைப்படி தான் வீடுகள் ஒதுக்குவார்கள். தாழ்த்தப்பட்ட மக்களுக்கு, ஓய்வு பெற்ற ராணுவ வீரர்களுக்கு, பத்திரிகையாளர்களுக்கு, சலவை, முடிவெட்டும் தொழிலாளருக்கு என்று கோட்டா இருக்கிறது. இதுதவிர பத்து சதவீத கோட்டா அரசு கோட்டா. இதெல்லாம் போக மீதிதான் பொது மக்களின் மற்ற பிரிவினருக்கு. முன்பெல்லாம் குலுக்கல் முறையிலும் ஊழல் நடந்து வந்தது. குலுக்கும் ஊழியர் கையில் டோக்கனை வைத்துக் கொண்டே, கையைஉள்ளே விட்டு எடுப்பது போல் பாவனை செய்து கையிலுள்ள டோக்கனைக் காட்டுவார். ஆனால் சமீப காலத்தில் மக்களின் விழிப்புணர்ச்சியால் (அதுவும் சென்னை நகரத்தில்) மக்களே நேரிடையாகச் சென்று குலுக்கி டோக்கனை எடுப்பதால், ஊழல் செய்ய வசதியில்லை. ஆனால் இந்தப் பத்து சதவீத அரசு கோட்டா இருக்கிறதே! அது, அதிகாரிகளும் அமைச்சர்களும் சம்பாதிப்பதற்காகவே வைக்கப்பட்டிருக்கும் கோட்டா.

ஒரு உண்மையான ஜோக்: சில வருடங்களுக்கு முன்பு வீட்டு வசதி அமைச்சரிடம் அரசு கோட்டாவில் வீட்டைப் பெறுவதற்கு எக்கச்சக்கமான மனுக்கள். யாருக்கு ஒதுக்குவது முதல்வரிடம் சொன்னாராம். அவர் சொன்னது: ''இதையும் குலுக்கிப்போடுங்கள்!''

சமீபத்தில் புதுக்கோட்டையில் ஒரு அமைச்சருக்கு வேண்டியவர்கள்மனை வாங்குவதற்கு மனுச்செய்தார்கள். பதினைந்து பேர்களுக்கு ஒதுக்குவதற்குத் தான் வாரியத்திடம் மனைகள் இருந்தன. ஆனால் மனு போட்டவர்களோ இருபத்தி மூன்று பேர். குலுக்கல் போட்டால் மந்திரிக்கு வேண்டியவர்களுக்கு மனை கிடைக்காமல் போய் விடுமோ என்ற சந்தேகத்தில் அல்லது பயத்தில் என்ன செய்தார்கள் தெரியுமா? பள்ளிகளுக்காகவும், கடைகளுக்காகவும் ஒதுக்கப்பட்ட மனைகளை எடுத்து மனுப்போட்டவர்கள் எல்லோருக்கும் கொடுத்து விட்டார்கள். அமைச்சரிடம் நல்ல பெயரைத் தட்டிக் கொண்டார் வாரியத் தலைவர்.

ஒரு ஓய்வு பெற்ற ராணுவ வீரரின் மனைவி ஈரோட்டில் வீட்டு வசதி வாரிய வீட்டிற்காக மனுப் போட்டிருந்தார். ஓய்வு பெற்ற ராணுவ வீரர்களின் கோட்டாவில் கட்டாயம் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் காத்திருந்தார். வாரிய அதிகாரிகள் குறிப்பிட்ட வீட்டைக் காட்டி

புதியது

# பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

# அதிக சுவையானது அதிக முழுமையானது




**நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும் உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரணசக்திக்கென முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. ஒவ்வொரு கவளத்திலும் அதிக முழுமையான திட உணவு.

CLARION/B/GX/3/203 Tml

இது அந்தக் கோட்டாவில் தான் இருக்கிறது என்று வேறு கூறி இருக்கிறார்கள். இவரும் நமக்குக் கிடைக்கும் என்று காத்துக்கொண்டிருந்தார். கடைசியில் பார்த்தால் அந்த வீட்டில் வேறு ஒருவர் வந்து குடி புகுந்தார். அவர் ஓய்வு பெற்ற ராணுவத்தினர் கோட்டாவில் பெறத் தகுதியுள்ளவர் அல்ல. பிறகு அவருக்கு எப்படிக் கிடைத்தது? இதைத் தெரிந்து கொள்ள நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தார். அமைச்சரின் சிபாரிசின் பேரில், அந்த வீடு அவருக்கு கிடைத்தது என்று நீதிமன்றத்தில் நிரூபணம் ஆயிற்று. அமைச்சருக்கு நீதி மன்றம் கண்டனம் தெரிவித்திருந்தது. மானமுள்ளவர்களாக இருந்திருந்தால் ராஜினாமா செய்திருப்பார்கள்! இது சமீபத்தில் நடந்த விஷயம்... இது மாதிரியான முறைகேடுகள் ஏராளம்.

• • •

கட்டி முடிக்கப்பட்டபின் பராமரிக்கும் செலவைத் தப்பாமல் குடியிருப்போரிடம் வாங்கிக் கொள்கிறது வாரியம். அது பராமரிக்கும் அழகைத் தெரிந்து கொள்ள சிறந்த இடம் பட்டினப்பாக்கத்தில் உள்ள குடியிருப்புக்கள். சாக்கடை பைப்புகள் உடைந்தும், காரை உதிர்ந்த வீடுகளில் உப்புக் காற்று செங்கற்களை அரித்துக் கொண்டு இருப்பதையும் சாலைகள் குப்பை மேடுகளாகக்காட்சியளிப்பதையும் காணலாம். அசோக் நகரில் உள்ள தமிழ் நாடு அரசு ஊழியர் குடியிருப்பும் அப்படித்தான். வாயுள்ள பிள்ளை தான் பிழைக்கும் என்பார்களே! அதற்கேற்ப பீட்டர்ஸ் காலனி வீடுகள் மட்டும் —பெரும்பாலான பத்திரிகைக்காரர்கள் அங்கு குடியிருப்பதால்,— வாரியத்தால் ஓரளவு சுத்தமாகப் பராமரிக்கப்படுகிறது.

பணத்தையும் வாங்கிக் கொண்டு, வீடுகளை சரியாகப் பராமரிக்க முடியாத வாரியம் மக்களின் கண்டனக் கணைகளைத் தாங்க முடியாமல் ஒரு நல்வாழ்வு சங்கம் அமைக்கச்சொல்லி அந்த சங்கத்திடம் பராமரிக்கும் பொறுப்பைத் தற்சமயம் விட்டு விடுகிறது.

• • •

உலக வங்கி, மத்திய அரசின் நகர்ப்புற வீட்டு வசதி நிறுவனம் (HUDCO) போன்றவற்றின் நிதியுதவியோடு தான் வாரியம் செயல்படுகிறது. இந்தியாவிலேயே 'தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம்தான் மிகச் சிறந்த பணி ஆற்றுகிறது, வாங்கிய பணத்தைத் திருப்ப ஒழுங்காகத் தருகிறது' என்றெல்லாம் கூறுகிறார்கள். இதற்கு மறு பக்கமாக ஒன்று: ஒழுங்காக தவணைகளைச்செலுத்தி வந்த பத்திரிகை நிருபர் ஒருவருக்கு மூன்று வருடங்களாகப் பணம் கட்டவில்லை என்று நோட்டீஸ் விட்டார்கள். மனிதர் ஆடிப் போய் விட்டார். பிறகு தன்னிடமிருந்த ரசீதுகளைக் காண்பித்து வாரியத்தின் கணக்கைச் சரிப்படுத்தினார்!

• • •

முன்பெல்லாம் ஒரு கோடி திட்டம் என்றால் பிரித்துக் கொடுப்பார்கள். இப்போது ஒரே நபர் ஒரு கோடி ஒப்பந்தத்தையும் பெற்றுச் செல்கிறார். குறைந்த செலவில் கட்டிக் கொடுக்க முன்வரும் ஒப்பந்தக் காரருக்கு தான் கொடுப்பார்கள். இது மரபு. ஆனால் 'குறைந்தபட்ச டெண்டர் போடுபவர்களுக்குத் தான் கட்டாயம் கொடுக்க வேண்டும் என்ற நிபந்தனை ஒன்றும் இல்லை என்று கூறி வேண்டப்பட்டவர்களுக்குக் கொடுக்கிறார்கள். பெற வேண்டியதைப் பெற்றுக் கொண்டு, பெரும் தொகையுள்ள ஒப்பந்தத்தை பிரித்துக் கொடுத்தால், தொழில் போட்டியும் இருக்கும். ஊழல் நடக்கவும் வாய்ப்பு இருக்காது.

• • •

1961–இல் ஆரம்பிக்கப்பட்ட இந்த வாரியத்தில் 1978 வரை தலைவர்களாக ஐ. ஏ. எஸ். அதிகாரிகள் தான் இருந்தார்கள். அ. தி. மு. க. ஆட்சிக் காலத்தில் தான் முதன் முதலாக அரசியல்வாதி ஒருவர் தலைவராக்கப்பட்டார். ஒரு வருடம் தானே இந்தப் பதவி, அதற்குள் அகப்பட்டதைச் சுருட்டலாம் என்று வாரியத்தலைவராக வரும் அரசியல்வாதிகள் முறைகேடான வழிகளில் நடப்பதும் ஆட்சியிலிருப்போரைத் திருப்திப்படுத்த அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்வதும் சகஜமாகி வருகிறது.

- பிரியன்

படங்கள்: சேகர்



ஹாலந்து நாட்டில் பஸ் டிராம்களில் செல்லும் நாய்களுக்கு சீசன் டிக்கெட் வழங்கப்படுகிறது. வார, மாத அல்லது ஓர் ஆண்டிற்குச் சேர்த்து அட்டையில் நாயின் பெயர், அந்த நாயை வளர்ப்பவரின் பெயர் குறிப்பிடப்படுவதுடன் நாயின் புகைப்படமும் ஒட்டப்பட வேண்டும்.

ஆதாரம்: தினமணி 21.6.84.

—எஸ். முகம்மது யூசுப்.

நவீனத் தொடர்கதை



உள்ளத்தை உருக்கும் காதல் காவியம்

# இந்துமதி

எழுதுகிறார்

# கல்கி

ஆகஸ்டு ௫௰ ஆண்டு மலரில்

இதர பல புதிய சிறப்பு அம்சங்களுடன்

நிரந்தரப் பயன் தரத்தக்க

## இலவச இணைப்பு



சென்னை கே. கே. நகர் ஸ்ரீ K.V. வெங்கடேஸ்வரன் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி **ரவிகிருஷ்ணனுக்கும்** ஸ்ரீ S.R. ராமச்சந்திரன் அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி சாவித்திரிக்கும் சென்னையில் சமீபத்தில் விவாஹம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்.

## திருத்தம்

கல்கி 1-7-84 இதழில் பாங்க் ஆப் தஞ்சாவூர் விளம்பரத்தில் ஜெனரல் மானேஜர் திரு R. சொக்கப்பா என்று தவறுகப் பிரசுரிக்கப் பட்டுள்ளது. அதை திரு S. சொக்கலிங்கம் ஜெனரல் மானேஜர் என்று திருத்தி வாசிக்கவும்.



-வி



# இன்னும் சில விளக்கங்கள்

வாசகர்கள் எழுப்பியுள்ள சந்தேகங்கள் சிலவற்றுக்கான விளக்கங்களைப் பார்க்கலாமே! (ரிப்ளை கார்டு, கவர் அனுப்பியவர்களுக்கும் வேறு பலருக்கும் தனிப்பட்ட முறையிலும் விளக்கங்கள் அனுப்பப்பட்டுள்ளதை இங்கே குறிப்பிடுவது அவசியம்.)

"11த்தாம் வகுப்புத் தேர்வில் பாஸ் பண்ணியிருந்தாலும், நிறைய மார்க் வரவில்லை. மேற்கொண்டு படிக்க இது போதாது. நான் சில பாடங்களை மட்டும் மறுபடி எழுதி, அதிக மார்க் வாங்க வழியுண்டா என்று கேட்கும் பா. அன்பழகனுக்கு (முதல் சான்ஸின் போது பரீட்சை சமயம், ஜாலியாய் இருந்திருப்பாரோ?) ஆறுதல் தரக் கூடிய விஷயம்: நீங்கள் மறுபடி ஒரு சில பாடங்களை எழுதி 'இம்ப்ரூவ்' செய்ய வழியுண்டு. வரும் செப்டம்பரில் கொஞ்சம் சீரியஸாய்ப் படித்துப் பரீட்சை எழுதுங்கள். தேறிடலாம்! வாழ்த்துக்கள்!

• • •

அன்பிற்குரிய கல்கி ஆசிரியருக்கு என்று ஆரம்பித்து, எ. கா. உ. கை. பகுதியைப் பாராட்டிவிட்டு, அரசாங்க பாலிடெக்னிக்கில் தனக்கு இடம் கிடைக்காதது பற்றியும், திருவனந்தபுரத்தில் தனியார் கல்லூரி அளிக்கும் டிப்ளமா படிக்கிறது பற்றியும் எழுதுகிற முகமது ஷமீக் தனக்கு அரசாங்க வேலை கிடைக்குமா? என்கிறார்.

ஷமீக்! அரசு தருகிற டிப்ளமாக்களை அரசாங்க மற்றும் தனியார் நிறுவனங்கள் ஏற்றுக் கொள்கின்றன. ஆனால் தனியார் டிப்ளமாக்களை அரசு நிறுவனங்கள் ஏற்றுக் கொள்வதில்லை. உங்களுக்குத் தனியார் நிறுவனங்களில் வாய்ப்புள்ளது. எந்த டிப்ளமாவானாலும், வெறும் புத்தகப் புழுவாய் இல்லாமல் பிராக்டிகல் அறிவை நன்றாக வளர்த்துக் கொள்ளுங்கள். அரசாங்க நிறுவனங்களை விட, தனியார் நிறுவனங்களில் தான் திறமையும், அறிவும் உள்ள இளைஞர்களுக்கு முன்னேற வாய்ப்புக்கள் அதிகம்! மனம் தளராதீர்கள்! (மீண்டும் நான் பாலிடெக்னிக் சேர முடியுமா? என்றும் கேட்டிருக்கிறீர்கள். உங்களுக்குச் சின்ன அட்வைஸ். பாலிடெக்னிக்கில் சேர்ந்து இன்னும் மூன்று வருஷங்களை வேஸ்ட் பண்ணாதீர்கள்.)

• • •

யுவர் ஆனர்! எந்தெந்த கோர்ஸ் பற்றியோ விவரங்களையெல்லாம் சொல்கிறீர்கள், இந்த 5 வருட சட்டக் கல்வி பற்றி மூச்சுவிடவில்லையே என்று குற்றம்சாட்டுபவர் சுதர்சன் (நங்கநல்லூர்.)

அவசரப்பட்டால் எப்படி சுதர்சன்? ஒவ்வொன்றாய்த் தானே எழுத வேண்டும். கல்வித் தகுதி: ப்ளஸ் 2-ல் எந்தப் பிரிவு படித்திருந்தாலும் 45 சதம் மார்க் இருக்க வேண்டும். திருச்சி, கோவை, மதுரை, சென்னை நாலு இடங்களிலுமுள்ள சட்டக் கல்லூரிகளில் இருக்கும் மொத்த இடங்கள் 490. நாலு இடங்களிலும் விண்ணப்பம் பெறலாம். இன்டர்வியூ உண்டு. முன்பெல்லாம் வக்கீலுக்குப் படித்தால், தனியாய்த்தான் பிராக்டீஸ் செய்ய வேண்டும். ஆனால் இப்போதோ, பாங்குகள், கம்பெனிகள்,

## அடுத்த வாரம்






-சிறப்புக் கட்டுரை

எல்லாவற்றிலும் வீகல்அட் வைசராய்ப் பணிபுரியலாம். தவிர சப் – மாஜிஸ்டிரேட், மாவட்ட முன்ஸிப், துணை பப்ளிக் பிராசிக்யூட்டர், தலைமைச் செயலகத்தில் சட்டத் துறையில் என்று இங்கெல்லாம் கூட வேலை வாய்ப்பு உள்ளது.

● ● ●

பி. எஸ்ஸி. அப்ளைடு சயன்ஸ் படிப்பு பற்றிக் கேட்டிருக்கிறார் கட ஊரி லிருந்து தாசில்தார் சுந்தர ராஜன் (தகவல் திரட்டி, விடை அளிப்பதற்குள் ஒரு ரிமைண்டர் வேறு.)

சாதாரண பி. எஸ்ஸியை விட, பி.எஸ்ஸி (அ.சயன்ஸ்) நல்லது. இவர்களுக்கு மொழிப் பாடங்களுக்கு முக்கியத்துவம் தராமல், அறிவியல் பாடங்களுக்கு முக்கியத்துவம் தரப்படுவ தால் சப்ஜெக்ட் பற்றி விரி வான அறிவு இருக்கும். பி. எஸ்ஸி தகுதி கேட்கிற எதற்கும் இவர்களும் தகுதியானவர்களே! சாதா பி. எஸ்ஸியை விட இவர் களுக்கு சான்ஸ் அதிகம். கிண்டி இஞ். காலேஜுக்கு 15 ரூபாய் போஸ்டல் ஆர்டர் (ரெஜிஸ்டிரார் பெயரில்) அனுப்பி, விண்ணப்பம் பெறவும். இதை முடித்ததும் பி.டெக், எம். எஸ்ஸி, இவை படிக்க லாம்.

● ● ●

● பிளஸ் 2-ல் தவறி, தன் எதிர்காலமே பாழாகிவிட்ட தாய் வருந்துகிற தன் நண்பன் மேலே என்ன செய்ய லாம் என்கிறார் பெரம்பூர் குருமூர்த்தி.

● பிளஸ்–2ல் 602 மார்க். மேற்கொண்டு என்ன படிக்க லாம் (கோவை—16 ஜீவன் லால்.)

● ஆட்டோ மொபைல் எஞ்சினியரிங், மெகானிக் கல் இஞ்சினியரிங்(ஐ.டி.ஐ. யில்) பற்றி எழுதுங்கள். (திண்டுக்கல் அசோக்குமார்)

● ஐ. டி. ஐ. படிப்பு பற்றி விரிவாக எழுதினால் உப யோகமாய் இருக்கும். (திருவண்ணாமலை ராஜா ராமன்.)

தமிழகம் முழுவதும், இண்டஸ்டிரியல் டிரெயினிங் இன்ஸ்டிட்யூட்டுகள் எனப் படும் ஐ. டி. ஐக்கள் மொத் தம் 35 உள்ளன. இதில் மொத்தம் 42 வகையான படிப்புக்கள் உள்ளன. வயது வரம்பு 15 முதல் 25வரை. இதில் சேர எஸ்.எஸ். எல். ஸி (1) ஃபெயில் ஆகி யிருந்தாலும் பரவாயில்லை, (2) பாஸ் செய்திருக்கவேண் டும், (3) 50 சதம் மார்க் தேவை என்று படிக்க விரும் பும் பிரிவுக்கேற்ப கல்வித் தகுதி உள்ளது. சில பிரிவு களுக்கு நுழைவுத் தேர்வு உண்டு. வேறு சிலவற்றுக்கு இண்டர்வியூ உண்டு. எல்லா வற்றையும் பற்றி விவரமாய் எழுத, இலவச இணைப்புப் போட வேண்டி இருக்கும். உங்கள் ஊரில், ஊருக்குப் பக்கத்தில் இருக்கும் ஐ. டி. ஐக்குப் போய், அல்லது தபாலில் விண்ணப்பபாரம், பிராஸ்பெக்டஸ் வாங்கிப் படியுங்கள் (விலை ரூ. 3. போஸ்டல் ஆர்டர், சுய விலாசமிட்ட ஸ்டாம்ப் ஒட் டிய கவர் அனுப்பவும்.)

தேவையான பிரிவில் சேர்ந்து படியுங்கள். இவை எல்லாமே சர்டிபிகேட் படிப் புக்கள்.

இன்னும் சில விளக் கங்கள் அடுத்த வாரம்:

–சந்திரமௌலி

## “என் குடும்பத்திற்குச் சிறந்த வசதிகளை அளிக்க நான் கடினமாக வேலை செய்திருக்கிறேன். எங்களிடமுள்ளது அனைத்தையும் காப்பாற்றி அனுபவிக்க நாங்கள் விரும்புகிறோம். இதற்கு ஓரியண்டலை விட, வேறு சிறந்த வழி என்ன இருக்க முடியும்?”



### திரு. பிரசாத்
### சீரிய விவேகமுள்ள குடும்பத் தலைவர்.

இன்றைய உலகில் உங்கள் வீட்டிற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொள்ள பெரும் செலவாகிறது. வாழ்க்கையில் நல்ல பொருள்களை வாங்கிச் சேகரித்துக் கொள்வதற்கு பல மாதங்கள் கவனமாகத் திட்டமிடலும் கணக்குப் பார்த்தலும் தியாகங்களும் தேவைப்படுகின்றன. ஆனால் இவையெல்லாம் ஒரு சில குரூரமான கணங்களில் அறவே மாறி விடமுடியும். வீடுபுகுந்து கொள்ளை, திருட்டு, தீ, கலகம்—எப்போது, என்ன நேரும் என்று யாருக்குத் தெரியும்? அதனால் ஆபத்துக்கு இடம் கொடுப்பானேன் ?

திரு. பிரசாத் இடம் கொடுக்கவில்லை.

அவர் ஹவுஸ்ஹோல்டர்ஸ் பேக்கேஜ் பாலிஸியை ஓரியண்டல் இன்ஷுரன்ஸிடம் எடுத்துக் கொண்டார். சிறியதொரு ப்ரீமியத்திற்கு அது அவருக்கு எதிர்பாராத சேதங்களுக்கு பாதுகாப்பு அளிக்கிறது. தீ விபத்து, திருட்டு, கலகம், காஸ் சிலிண்டர் வெடிப்பு—ஏன் வெள்ளம், புயல் போன்றவற்றினால் கூட அச்சேதங்கள் ஏற்படலாம்.

கூடுதல் செலவு ஏதுமின்றி அதே பாலிஸி, அவருக்கு ஏற்படக்கூடிய விபத்துகளுக்குக்கூட காப்பீடு அளிக்கிறது (ரூ. 10,000 வரை) பயணத்தில் காணாமல் போகக்கூடிய சாமான்களுக்கு (ரூ. 1,000 வரை) பொது மக்களுக்கு ஏற்படக்கூடிய சட்டப்படியான பொறுப்புகள் (ரூ. 20,000 வரை ஓராண்டிற்கு)

சொற்ப செலவில் உங்களுக்கு வேறு என்ன சிறப்பான பெறுமானத்தைக் கொடுக்க இயலும்? திரு பிரசாதின் ஆலோசனையை பின்பற்றுங்கள். அருகாமையிலுள்ள ஓரியண்டல் இன்ஷுரன்ஸ் அலுவலகத்துடன் தொடர்பு கொள்ளுங்கள்; அல்லது எழுதுங்கள்: எச்பிபி, த. பெ. எண் 7037 புதுதில்லி-110002.

### பயம் இன்றி வாழுங்கள்

**ஹவுஸ்ஹோல்டர்ஸ் பேக்கேஜ் பாலிஸி**

| மதிப்பிடப் பட்ட பெறுமானம் | நடப்பு ஆண்டு ப்ரீமியம் |
|---|---|
| ரூ. 20,000/- | ரூ. 60/- |
| ரூ. 30,000/- | ரூ. 90/- |
| ரூ. 50,000/- | ரூ. 150/- |
| ரூ. 60,000/- | ரூ. 180/- |
| ரூ. 75,000/- | ரூ. 225/- |
| ரூ. 1,00,000/- | ரூ. 300/- |



**தி ஓரியண்டல் இன்ஷுரன்ஸ் கம்பெனி லிமிடெட்**

(ஜெனரல் இன்ஷுரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியாவின் துணை நிறுவனம்)

SIMOES-D/OIC/101/84 TAM


ஜாமீன் இல்லாத
கடன்
ஜனார்த்தன் பூஜாரி
ஏழை
மக்கள்


ஒருத்தருக்கு நாலு பேரா சிக்கல்
எடுக்க முயற்சி பண்றது நல்லது தானே?
இஸ்ரேலிய
பயிற்சிக்
குழு
பிரிட்டிஷ்
கூலிப் படை
இலங்கைத் தமிழர் பிரச்சினை


மதன்.
பாகிஸ்தான்
பாரதம்
பஞ்சாப்.
லடாக்கில்
விஷமங்கள்




**கல்கி**

1984 ஜூலை 8
மலர்: 42 இதழ்: 49
ரக்தாக்ஷி ஆனி 24




# சாண் ஏறி முழம் சறுக்கிய கதை!

ஏகமாக நஷ்டப்பட்டுக் கொண்டிருந்த அரசுத்துறை நிறுவனங்கள், பல வருஷங்களாகப் பலமான கண்டனங்களுக்கு ஆளான பின்னர், 82—83—ல் ஒட்டுமொத்தமாக 8.5 கோடி லாபம் பெற்றன. 83—84—லிலோ மறுபடியும் 13 கோடி நஷ்டம் அடையும் மகத்தான சாதனை புரிந்துள்ளன! சாண் ஏறி முழம் சறுக்கிய கதைதான்! எங்கோ யாருக்கோ ஏற்படுகிற நஷ்டமல்ல. அரசுத் துறையில் நஷ்டமென்றால் நாட்டிலுள்ள ஒவ்வொரு பிரஜையும் நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான் என்று பொருள். இந்த நஷ்டத்தை அவன் அதிகரிக்கும் வரிகள் மூலமும் விலைவாசி உயர்வின் மூலமும் கொடுத்து அழுகிறான்.

சமீப காலமாகப் பெட்ரோலியம் எண்ணெய்க் கிணறுகள் அதிக அளவில் கண்டுபிடிக்கப்பட்டு உற்பத்தியும் அதிகரித்திருப்பதால் அரசுத் துறையின் இப்பிரிவு ஏகமாக லாபம் சம்பாதித்திருக்கிறது. ஏகபோக்கியம் அல்லவா? இது மட்டும் இல்லையெனில் அரசுத் துறையின் ஒட்டுமொத்த நஷ்டம் 13 கோடி அல்ல 1300 கோடியாக உயர்ந்திருக்கும்! இதிலிருந்து, நல்ல காலம், ஏதோ இந்த மட்டில் இந்தியப் பிரஜை தப்பித்தானே என்று பெருமூச்சு விடும்போதே மற்ற பிரிவுகளில் அரசுத்துறை அடைந்துள்ள நஷ்டம் எவ்வளவு அபரிமிதமாக இருக்கும் என்பதையும் ஊகிக்கலாம்.

சில காலம் முன்பு வரை அரசுத்துறை நிறுவனங்கள் நஷ்டமடைந்து வருகின்றனவே என்று யாரேனும் சுட்டிக் காட்டினால், ''அப்படித்தான் நஷ்டப்படும்; தனியார் துறை போல அரசுத் துறையில் லாபநோக்கை மட்டும் பிரதானமாகக் கொள்ள முடியாது; சமுதாய நலனுக்கும் தொழிலாளர் நலனுக்கும்தான் இங்கு முதலிடம்'' என்று கூறி ஏமாற்ற முயன்றார்கள். இது அபத்தவாதம் என்றும் இந்த நஷ்டம் சமுதாயத்தையும், தொழிலாளரையும் துன்பத்திலேயே ஆழ்த்துகிறது என்பதையும் இப்போது புரிந்து கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள். அரசுத்துறையும் லாபம் காண வேண்டும், இல்லாதுபோனால் தேசப் பொருளாதாரம் பாழாகும் என்ற கருத்து உயர்மட்டத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதே பெரிய முன்னேற்றம். அரசுத் துறை நிறுவனங்கள் பல நஷ்டத்தில் நடப்பது பற்றி மத்திய தொழில் மந்திரி திவாரி வருத்தப்பட்டுப் பேசியிருக்கிறார்.

நமது தேசத்தில் தனியார் துறையும் ஒருவிதத்தில் அரசுத்துறையே! ஏனெனில் ஏகப்பட்ட சட்டதிட்டங்கள், அபரிமிதவரிகள், கண்ட்ரோல்கள் மூலம் அரசு இவற்றைத் தனது கட்டுப்பாட்டில் வைத்துள்ளது. இருப்பினும் தனியார் துறையில் பல நிறுவனங்கள் செழிக்கின்றன எனில் அதற்கு நிர்வாகப் பொறுப்பில் உள்ளோருக்கு இயற்கை நியதிக்கு ஏற்பத் தொழிலில் ஏற்படுகிற ஈடுபாடு, பற்றுதல் இவையே காரணம். இத்தகைய ஆழ்ந்த ஈடுபாட்டினை அரசுத்துறை அதிகாரிகளிடம் எதிர்பார்க்கவே முடியாது. லாபநோக்கு என்ற இயல்பான ஆர்வம் தனியார் துறையில் செயல்படுகிற விதமாக அரசுத் துறையில் இயங்க வாய்ப்பே இல்லை. 'ஏதோ நடந்தால் சரி, நடக்காது போனால் நமக்கென்ன ஆயிற்று?' என்ற மெத்தனம் தான் நிலவும். இதுவும் இயற்கையே. அரசுத் துறையில் லாபம் கண்டு வரும் பல நிறுவனங்களும் கூட ஏகபோக்கியமாய் இருப்பதால்தானேயொழிய போட்டாப் போட்டியில் சரிந்து விடலாம்.

தேசத்தின் செல்வம் என்பது சிறிதும் பெரிதுமான பல தனித்தனித் தொழில்கள் காணும் லாபத்தின் ஒட்டுமொத்த வடிவமே. அதை இயற்கை நியதியையொட்டி வளம் பெறச் செய்வதே புத்திசாலித்தனம்.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

## விவாத மேஜை

# இந்த வார ராசபலன்

### மாலினி சேஷாத்ரி



"அஞ்சலி, இதைக் கேள்!" என்றார் ராஜகோபாலன், மனைவியைப் பார்த்து. "இந்த வாரம் கவர்ச்சியான ஒரு மனிதனைச் சந்திப்பாய் நீ. ஆனால் ஜாக்கிரதை, உன் மனத்தை அவனிடம் பறிகொடுத்து விடாதே!"

ஒரு நிமிடத்துக்கு அதிர்ச்சியான அமைதி அங்கே நிலவியது. விவேக்கும் ரஞ்சிதாவும் வாயடைத்துப் போயினர். அப்பாவின் 'மூட்' எப்படி என்று கணிப்பதில் சாமர்த்தியசாலியான ரஞ்சிதா தான், ராஜகோபாலனின் உதட்டோரத்தில் தெரிந்த விஷமப் புன்னகையை முதலில் கண்டு பிடித்தாள்.

"ஐயோ, ரொம்பத்தான் பயந்து விடாதே அம்மா! இது அப்பாவின் ஜோக் அடிக்கிற பாணி!" என்றாள். "வாராந்தர ராசி பலனில் உனக்கு என்ன போட்டிருக்கிறது என்று படிக்கிறார், அவ்வளவு தான்!"

அஞ்சலிக்குக் கொஞ்சம் மனவருத்தம்தான். "எதற்கு இதையெல்லாம் படிக்கிறீர்கள்? வெறும் குப்பை!"

"குப்பை ஒன்றும் இல்லை அம்மா!" என்றான் விவேக், தீவிரமாக. "ஷாப்பிங் போக எது நல்ல நாள் என்று ஜோசியர் கூறுவார். எக்கச்சக்கமாய்ப் பேரம் செய்து நீ சாமான்கள் வாங்கலாம்..."

"ஆமாம்மா..." என்றாள் ரஞ்சிதா. "ராசி பலனில் எந்தக் கலர் உடை உடுத்தினால் அன்று அதிர்ஷ்டம் அடிக்கும் என்று கூடச் சொல்லிவிடுகிறார்கள். புடவை அலமாரியைத் திறந்து வைத்துக் கொண்டு, எதை உடுத்திக் கொள்வது என்று யுகக் கணக்காய் நீ யோசித்துக் கொண்டிருக்க வேண்டாம்!"

"போதும் நிறுத்துங்கள்!" என்றாள் அஞ்சலி "சுய நினைவுள்ள எவனும் இந்த மாதிரி 'ஜோதிட' 'அறிவுரை'களை சீரியஸாக எடுத்துக் கொள்ள மாட்டான்."

"அப்படியென்றால் இதெல்லாம் பைசா பெறாத விஷயம் என்கிறாயா?" என்றார் ராஜகோபாலன், பேப்பரில் ஜோசியப் பகுதியைத் தட்டியபடியே. "அப்படி இருந்தும் போன புதன் கிழமை நீ கோமளாவுடன் அவள் பெண்ணின் ஜாதகத்தைத் தூக்கிக்கொண்டு, பிள்ளையின் ஜாதகத்துடன் சேருகிறதா என்று பார்க்க அலை அலையென்று அலையவில்லை?"

"அது வேறு விஷயம்!" என்றாள் அஞ்சலி. "அப்படி ஜாதகப் பொருத்தம் பார்க்கவில்லை என்றால், கோமளாவின் பெண் ரேணுவுக்கு எப்படித்தான் கல்யாணம் பண்ணுவதாம்? போதாக் குறைக்கு, பெண்ணுக்கு 'தோஷ ஜாதகம்' வேறு!"

"முட்டாள்தனம்!" என்று குறுக்கிட்டான் விவேக், ஆத்திரத்துடன். "ஒருவருடைய ஜாதகத்தை எப்படி எழுதுகிறார்கள்? சொல்லு நீ!"

"பிறந்த நாளையும் நேரத்தையும் கணித்து!" என்றாள் அஞ்சலி பொறுமையுடன். "இதைவைத்தே ஒரு முழு ஜாதகத்தையும்



எழுதி விடுவார்கள் ஜோதிடர்கள். தெரியுமா?''

''நேரம் என்றால் என்ன?'' என்றார் ராஜகோபாலன். ''இந்தியன் ஸ்டாண்டர்ட் டயமா? ஒரே சமயத்தில், இந்தியாவில் ஒன்றும் அமெரிக்காவில் ஒன்றும் ஆக இரண்டு குழந்தைகள் பிறந்தாலும், கடிகாரங்கள் கிட்டத்தட்ட ஏழு மணி நேரத்துக்குமேல் வித்தியாசம் காட்டுமே!''

''இருந்து விட்டுப் போகட்டுமே!'' என்றாள் அஞ்சலி. ''எவ்வளவானாலும் அமெரிக்காவில் ஜாதகங்களை நம்புவதில்லை!''

''ஏன், இந்தியாவிலேயே ஆஸ்பத்திரி கடிகாரங்களாகட்டும், நம் கைக்கடிகாரம் ஆகட்டும் — தவறாக இருக்க வாய்ப்பு உண்டு'' என்றாள் ரஞ்சிதா.

''அது வேண்டாம், பம்பாய், கல்கத்தாவை எடுத்துக் கொள்ளுங்கள்!'' என்றான் விவேக், பாடம் சொல்லித் தருகிற தோரணையில். இரண்டும் வெவ்வேறு கோடிகளில் இருப்பதால் இந்த இரண்டு இடங்களிலும் சரியான நேரம் ஒரே மாதிரி இருப்பதில்லை — அவை இந்தியன் ஸ்டாண்டர்ட் டயமாக இருந்தாலும் கூட!''

''உன் விஞ்ஞான, பூகோள வாதங்கள் எல்லாம் இருக்கட்டும்'' என்றாள் அஞ்சலி அழுத்தமாக. ''பழைய அறிஞர்கள் எல்லோரும், நம் வாழ்க்கையை நட்சத்திரங்கள் எவ்வளவு பாதிக்கின்றன என்று கண்டறிந்திருக்கிறார்கள். பண்டைய நாகரிகத்தில், உலகின் பலபாகங்களில் இதையெல்லாம் நம்பிக் கொண்டு தான் இருந்தார்கள். அவர்கள் எல்லோருமே அடிமுட்டாள்களா என்ன?''

''அம்மா!'' என்றாள் ரஞ்சிதா அலுப்புடன். ''சூரியனைத் தவிர மற்ற எல்லா நட்சத்திரங்களும் வெகு தொலைவில் இருக்கின்றன என்று தெரியாதா உனக்கு? ஒரு குறிப்பிட்ட நட்சத்திரம் இன்று மறைந்து விட்டாலும்கூட, நாம் அதைப் பற்றி அறியப் பல வருஷங்கள் ஆகும்!''

''நீ என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்'' என்றாள் அஞ்சலி. ''ஆனால் ஜாதகப் பொருத்தம் பார்ப்பது அவசியம் தான். நம் திருமணங்கள் ஆயுசு முழுவதும் நிலைத்து இருக்கின்றன. மேற்கத்திய நாடுகளில் அவர்கள் ஜாதகம் பார்ப்பதில்லை; அதனால் தான் அங்கே ஒரே விவாகரத்து மயமாக இருக்கிறது!''

''நேற்று நான் பேப்பரில் படித்துக் காட்டினேனே ஒரு வரதட்சணைக் கொடு



மைச் சாவு பற்றி?'' என்றார் ராஜகோபாலன். ''அந்தத் தம்பதியும் ஜாதகப் பொருத்தம் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொண்டவர்கள்தான்!''

''என் தோழியுடைய சகோதரி, ஒரு விவாகரத்து வழக்குப் போட்டிருக்கிறாள்'' என்றாள் ரஞ்சிதா. ''அதுவும் இந்த மாதிரி ஜாதகங்கள் ரொம்பவும் பொருந்தியதுதான்.''

''இப்போது இதெல்லாம் பேசுகிறீர்கள்!'' என்றாள் அஞ்சலி, கணவரைப் பார்த்து. ''ரஞ்சிதாவுக்குக் கல்யாணம் பண்ணுகிற சமயம், உங்கள் அம்மா ஜாதகம் பார் என்பார். அப்போது உங்கள் பெண்ணின் ஜாதகத்தை எடுத்துக் கொண்டு ஜோசியரிடம் ஓடுவீர்கள். தெரியாதா எனக்கு?''

பேசுவதற்கு வேறு ஏதேனும் செய்தி கிடைக்குமா என்று பார்க்கிற மாதிரி, செய்தித்தாளைப் புரட்டுவது போல் பாவனை செய்தார் ராஜகோபாலன்.

புகைப்படம்: சுபா

---

இந்தியாவின் பிரதம நீதிபதி திரு. சந்திரசூட் தாம் பம்பாய் உயர்நீதிமன்ற நீதிபதியாக இருந்த போது நடந்த ஒரு சம்பவத்தைச் சில தினங்களுக்கு முன்பு விவரித்தார். ஒரு விருந்தின் போது அவருக்குப் பக்கத்தில் ஒரு குண்டன் வந்து அமர்ந்தானாம். சில வாரங்களுக்கு முன்புதான் அவனுக்குத் தண்டனை விதித்திருந்த அவர் திகைத்துப் போனார். ஆனால் அந்தக் குண்டனோ சர்வ சாதாரணமாகத் தான் ஜெயிலுக்குப் போகவே இல்லை என்றும் நீதிபதி கொடுத்த தண்டனை நிறைவேற்றப்படவே இல்லை என்றும் அவரிடமே பெருமை அடித்துக் கொண்டான்! அரசு அவனைப் பரோலில் விடுதலை செய்தது மட்டுமின்றி பரோலைக் காலவரையறையின்றி நீடித்துக் கொண்டே போயிற்று! அவன் ஏன் நீதிபதி பக்கத்தில் அமர்ந்து விருந்துண்ண மாட்டான்?

நன்றி: காமர்ஸ்



# கேட்டோம் சொல்கிறோம்






பிரபல எழுத்தாளரும் பத்திரிகையாளருமான திரு. எம். வி. காமத் அண்மையில் சென்னை வந்திருந்தார். VIGIL சார்பில் தேசிய ஒருமைப்பாடு பற்றிப் பேசினார். மிருதுவாகப் பேசியபோதிலும் ஆங்காங்கே 'சுரீர்' கருத்துக்கள் தெறித்தன. சாம்பிள்:

- இந்த நாட்டில் பல பிரச்னைகள் இருப்பதாகக் கூறுவர். என்னைக் கேட்டால் ஒரே ஒரு பிரச்னைதான் இருப்பதாகச் சொல்வேன். அந்த ஒரே பிரச்னை: திருமதி இந்திராகாந்தி!

- ஜனாதிபதி ஆட்சி முறை இங்கே வரட்டும். ஆட்சேபனை இல்லை. ஒரே ஒரு நிபந்தனை தான்: திருமதி இந்திரா காந்தி தேர்தலுக்கு நிற்கக் கூடாது!

- மொழிவாரி மாநிலங்கள் ஏற்பட்ட பிறகு நாம் ஒவ்வொரு மாநிலத்தைச் சுற்றிலும் "சுவர்" எழுப்பிக் கொண்டு விட்டோம். ஏதோ மத்திய ஆட்சிக்கும் மாநில ஆட்சிக்கும் இடையில் தான் தொடர்பு அல்லது போராட்டம் என்பதுபோல் ஒவ்வொரு மாநிலமும் நடந்து கொள்கிறது. இந்நிலை மாறித் தங்கள் மாநிலப் பிரச்னைகளை அம்மாநிலத் தலைவர்கள் மற்ற மாநிலங்களுக்கு விஜயம் செய்து மக்களுக்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

- சீக்கியர்கள் பலர் தங்கள் மதம் எதையெல்லாம் தடை செய்கிறதோ அதையெல்லாம் செய்யப் பழக்கிக் கொண்டு விட்டார்கள். தாடியை மழித்து விடுகிறார்கள், புலால் உண்கிறார்கள், மது அருந்துகிறார்கள். மகாராஷ்டிரத்தில் விற்பனை ஆவதை விட அதிக அளவு மது சிறிய மாநிலமான பஞ்சாபில் விற்பனை ஆகிறது. இதனையெல்லாம் மதத்தலைவர்கள் கவலையுற்றுத் தங்கள் மதத்தைக் காப்பாற்றிக் கொள்ள முயற்சிகள் எடுப்பதும் ஒரு காரணம், இன்று பிரச்னை பூதாகார வடிவம் எடுத்துள்ளதற்கு.

- பஞ்சாப் பிரச்னை எப்போதோ தீர்க்கப்பட்டிருக்கும் – இந்திராகாந்தி மட்டும் பிரதமராக இல்லாதிருந்தால்!

("இந்தியாவில் உள்ள ஒரே பிரச்னை திருமதி இந்திரா காந்தி" என்கிறார் காமத். இந்தக் கருத்தே பிரச்னைக்குரியது. எங்கே இக்கருத்தை ஒட்டியும் வெட்டியும் எழுதுங்கள் பார்க்கலாம். கல்கியில் ஒரு பக்கத்துக்கு மேல் போகாமல் எழுதப்படும் சுவையான கட்டுரைகள் பிரசுரமாகிப் பரிசு பெறும். -ஆசிரியர்)

---




**'சீசன்' பிறந்த நாள்**

இங்கிலாந்து அரசர் அல்லது அரசியின் பிறந்த நாள் மாறவே மாறாது. ஜூன் பத்தாம் தேதி என்று அதிகாரபூர்வமாக வைத்துக் கொண்டாடுகிறார்கள்.

மன்னர் அல்லது ராணியின் உண்மையான பிறந்த நாள் எதுவாக இருப்பினும் 'அஃபிஷியல்' பிறந்தநாள் ஜூன்–10.

இச்சமயத்தில் சீதோஷ்ண நிலை நன்றாக இருக்கும் என்பதால் இப்படி வைத்திருக்கிறார்களாம்!

'டைம்ஸிலிருந்து'. எம். ஜே. கந்தமாறன்.




**ஈறுகளை பலப்படுத்துவதற்கான விசேட**
**அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கியிருப்பது ஃபோர்ஹென்ஸ் ஒன்றில்தான்.**
**உங்கள் ஈறுகள் உறுதியோடிருக்கும் போது உங்கள்**
**பற்கள் நீடித்த ஆயுளைப் பெறுகின்றன.**

சிறந்த அமெரிக்கப் பல் டாக்டர் ஆர். ஜே.
ஃபோர்ஹென், தன்னுடைய டூத் பேஸ்ட்டில் விசேட
அஸ்ட்ரிஞ்ஜெண்ட் ஒன்றைச் சேர்த்தார்! அது,
ஈறுகளில் நேரடியாக செயல்பட்டு உண்மையிலேயே
அவற்றை பலப்படுத்துகிறது. அது, ஈறுகளைப்
உறுதிப்படுத்துவதால் பற்கள் சிறந்த
பிடிமானத்தைப் பெறுகின்றன. ஆகவே பற்களுக்கு
உறுதியான அடித்தளமும் நீடித்த ஆயுளும்
கிடைக்கின்றன.




**போர்ஹென்ஸ் -பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்**

339F 203 TAM

## அத்தியாயம் 11

## மூன்றாம் தமிழ்ச்சங்கம்

'கோ'வென்று அழத் தொடங்கிய தியாகவல்லியை எவ்வளவோ சமாதானம் செய்கிறாள் திருமேனி. அவளது கண்களிலும் நீர்த்திரை. அது, ரகசிய சந்நிதானத்துக்குட முழுக்கு நீரில் மிருந்திருந்த சிதறல்...

ஒருவாறு தன்னைத் தேற்றிக் கொண்ட தியாகவல்லி, நீண்ட பெருமூச்சுடன் பாண்டியகுமாரி திருமேனியைக் கவனிக்கிறாள்...

''இதில் நீ அழ என்ன இருக்கிறது தியாகவல்லி?'' என்றாள் திருமேனி.

தியாகவல்லியின் நாவசைந்தது:

''இளவரசி! நீங்கள் தமிழ்மீது ஆணை என்று கூறவே நான் தயங்காமல் என்னை மறந்து உண்மையைச் சொல்லி விட்டேன். நான் அவரைக் காதலித்தது சத்தியம். மணக்க விரும்பியது சத்தியம்! அரியணையில் அமர ஆசைப்பட்டது சத்தியம். ஆனால் அவர் என்னுடன் சிறிய வயது முதல் பழகியவர். ஒருநாளும் என்னை எவது எண்ணத்தில் வைத்துப் பார்த்தாரில்லை. என்னை ஒரு நல்ல இடத்தில் சம்பந்தம் செய்யவே விரும்பினார். உங்களைப் பற்றிக் கேள்விப்பட்ட நாள்முதல், அவரது மனக் குகையில் உங்கள் திருமேனி ஓவியம் அழியாவண்ணம் பெற்றிருப்பதை அறிந்த நான், அடுத்த கணமே எனது எண்ணங்களை அப்புறப்படுத்தி விட்டேன், ஏன்? துப்புரவாக அழித்துக் கொண்டேன்!''

''அதாவது வேற்றுச் சம்பந்தத்துக்கு நீ உடன்பட்டுவிட்டாய்!''

''அல்ல, இளவரசி! அடுத்த ஜன்மத்தில் அவரை அடைய இந்த ஜன்மத்திலேயே தவத்தில் அமர்ந்து விட்டவள்.''

திருமேனியின் கண்கள் குளமாகிப் போயின. மிருந்திருந்த குடமுழுக்கு நீர்குபுகுபுக்கிறது...

''நீ அவ்வாறு தவம் செய்யவே தேவையில்லை. இந்த ஜன்மத்திலேயே உனது பிரார்த்தனை பலிக்கும்.''

''அது முடியாது இளவரசி! இந்த ஜன்மத்தில் வேங்கைமார்பன் உங்களது கணவாகவே இருந்து மடிவார். இந்த உறுதியை யாரும் அசைத்துப் பார்க்க முடியாது!''

''நான்தான்...''



திருமேனியின் நாவைத் தியாகவல்லியின் பேச்சு இடைபுகுந்து மறிக்கிறது...

''உஸ்! சகோதரர் என்ற வார்த்தையை வைத்துக் கொண்டு சகோரப் பறவையாக வேண்டாம்.''

திருமேனி வெறுமையாகச் சிரிக்கிறாள்.

''தியாகவல்லி! உன் கதைதான் இனி என் கதை!''

மேலும் வலியுறுத்தி இப்போதைக்கு ஏதும் சொல்வது அதிகப் பிரசங்கம் என்பதையுணர்ந்த தியாகவல்லி, ''இளவரசி! யார் கதை எப்படியோ! என் அண்ணன் கதையை எண்ணினால் எனக்குப் பயமாக இருக்கிறது. என்னை மறந்து நான் செய்த இந்தத் தவற்றால் அவரைத் தண்டித்து விடவேண்டாம். என்னை எப்படியும் அரியணையில் அமர்த்துவது என்கிற நியாயமான — தருமமான முடிவுடன் அவர் செய்தது இந்தக் குற்றம்! நான் ஏன் அவருடன் வந்தேன் என்று நீங்கள் நினைக்கலாம். ஏன்? கேட்கலாம்! அவர் வந்தது வேங்கைமார்பனை வேரறுக்க! நான் வந்தது அந்த வேங்கைமரத்துக்கு வேலி போட! இது அண்ணனுக்கே தெரியாது. இனியும் ஒரு பொய் கூறி ஒன்பது பொய்யில் அகப்படக் கூடாது என்பதால் உள்ளத்தைத் திறந்து விட்டேன். நீங்கள் எனது கதையை உங்கள் கதையாக எவ்வாறு எடுத்துக்கொள்வீர்களோ? விதி எவ்வாறு முடிவு செய்திருக்கிறதோ — நானறியேன்! ஆனால் எனது அண்ணனைத் தண்டித்து விட வேண்டாம்! நான் பெண்! தமிழும் பெண்! எனவே சத்தியத்தை மீற முடியவில்லை.''

திருமேனியின் கண்களில் தமிழ் முத்துக்களைப் போல நீர் முத்துக்கள் சரம் கோக்கின்றன. கற்புடைய பெண்ணின் கழுத்தெலும்பிலும் முத்திருக்குமாமே!

''என்ன யோசிக்கிறீர்கள் இளவரசி?''

''உனது அண்ணன் உணர்வை நான் மதிக்கிறேன், தியாகவல்லி! எனக்கும் ஓர் அண்ணன் இருந்து இப்படி நடந்தால் இதனையே செய்திருப்பார்! சரி, சரி! நேரமாகிறது. தமிழ்ச்சங்கத்துக்குச் சென்று திரும்பியதும் பேசுவோம், புறப்படு!''

இருவரும் தங்கள் முகங்களைச் சரிசெய்து கொண்டு புறப்பட்டனர்.

அந்தப்புரத்தை விட்டு, அரண்மனைக்குள் நுழைந்து, மூன்றும் கட்டைத் தாண்டுகிற போது...

அங்கே மாமன்னர் உக்கிரப்பெருவழுதிப் பாண்டியர் நின்றிருந்தார்.

''மகளே! தியாகவல்லியும் தமிழ்ச்சங்கத்துக்கு வருகிறாளா?''

''ஆமாமப்பா!''

''நீ தனியாகவே என்றும் போலத் தமிழ்ச்சங்கம் நோக்கிச் செல்! நீ வருங்காலச் சங்கத் தலைவி! அந்தக் கௌரவத்துடன் செல்! நீ இளவரசியாகச் செல்வதால் தியாகவல்லியை அழைத்துச் செல்!''

''தியாகவல்லி தமிழ்ச்சங்கத்தைப் பார்க்க ஆசைப்படுகிறாளப்பா!''

''யார் மறுத்தார்கள்? அவளும் வரட்டும். அவளை நான் அழைத்து வருகிறேன்.''

திருமேனிக்குத் தந்தையாரின் இந்த அரசியல் நாடகம் புரியவில்லை. அவள் தமிழ்ச்சங்கம் நோக்கித் தனித்தே சென்றாள்.



மனத்தே மன்மதக்கணைகள் மாஞ்சுக்ளிக ளாய் விட்ட தவிப்பு; கவலைகள் எரிந்து சாம்பலாக முடியாத தவிப்பு...

**மீ**ன் சின்னம் கொண்டு ஆட்சி செய்வ தால் மீனாட்சி என்கிற திருப்பெயருடன் கோயில் கொண்ட அங்கயற்கண்ணியும் ஆலவாய்த் தேவரும் குடிகொண்ட அந்தத் திருக்கோயில் மண்டபத்தில் தமிழ்ச் சங்கப் புலவர்கள் கூடியிருந்தனர்.

ஆதித் தமிழ்ச் சங்கத் தலைவியான மீனாட்சியம்மனின் பெரிய சிற்பம் நடுநாயக மாக நின்று தமிழ்நகை புரிகிறது. அதனடி யில் சங்கத் தலைவர் புலவரேறு மாங்குடி மருதனார் நடுநாயகமாக அமர்ந்திருக்கிறார். இடப்பக்கத்தே இருந்த ஆசனத்தில்இளவரசி திருமேனி. வலப்பக்கத்து ஆசனம் மாமன் னரை எதிர்பார்த்திருந்தது.

எதிரே ஐயூர் மூலங்கிழார்.

அகநானூறு எனும் தலைப்பில் அகத்தைச் சார்ந்த பழம்பெரும் சங்கப் பாடல்களைத் தொகுத்து வருபவரும், மதுரை உப்பூரிக் கிழார் மகனுருமான உருத்திரசன்மர், தமது ஆசாரக் கோலத்துடன் அமர்ந்து காணப்படுகிறார்.

பின்னே புலவர் பெருமக்கள்.

தொகுத்து முடித்த அகநானூறு அன்று அரங்கேற இருந்தது.

இன்னும் பாண்டிய மாமன்னரைக் காணோமே!

அதோ மாமன்னர் வருகிறார் என்பதை அறிவிக்க மங்கல வாத்தியங்கள் முழங்கு கின்றன.

என்றைக்குமே புலவர்களைக் காக்கச் செய்யாத தந்தையார் இன்று அவ்வண்ணம் செய்ததேன்? திருமேனி சிந்திக்கிறாள்.

தமிழ்ச்சங்கத்துக்கு வருகை தந்த மாமன்னர் உக்கிரப்பெருவழுதிப் பாண்டியர் தமது ஆசனத்தில் அமருமுன் கரம்கூப்பி அமருகிறார். ஒருபக்கமாகப் பார்வையாளராக வந்த தியாகவல்லியும் அமர்ந்தாள். இதுதான் தமிழ்ச்சங்கமோ?

அகநானூறு தொகுப்பு அரங்கேறுகிறது. அகனே அன்புடன் இசைந்து தொகுத்த, ஆரியத்திலும், தமிழிலும் புலமைகண்ட உருத்திர சன்மரைப் பாராட்டிப் பேசு கிறார்கள்.

இறுதியில் பாண்டிய மாமன்னர் அவ ருக்குச் செய்ய வேண்டிய சிறப்புக்களைச் செய்து கௌரவிக்கிறார்.

இந்தப் புகழ் பெற்ற தமிழ்ச் சங்கம் தியாகவல்லியின் கண்களுக்கு இனிதாக இருந்தாலும், இந்தத் தமிழர்களுக்கு சங்கம் வைத்துத் தமிழைக் காக்க வேண்டிய நிர்ப் பந்தமென்ன? தமிழை யார் அபகரித்துக் கொண்டு போய் விடப் போகிறார்கள்? எதிர்ப்பு எங்கே இருக்கிறது? இயல்பாக வளரும் தமிழைக் காக்க இவர்கள் யார்? என்பன போன்ற சிந்தனைகளும் அரும்பத் தான் செய்கின்றன.

புலவர் தலைவர் மாங்குடி மருதனார் சொன்னார்: ''இது ஒரு பொற்காலம். அக நானூறு அரங்கேறிய இந்தக் காலத்தில் தமிழகத்து முப்பெரும் வல்லரசுகள் ஒற்றுமை யுடன் திகழுகிறார்கள். மூவரும் ஒன்றாக இருந்ததை எனக்கு முன்பிருந்த சங்கத் தலைவி ஔவைப் பிராட்டியார் நேரில் கண்டு பாப்புனைந்திருக்கிறார். இந்த அரங்கேற்றத் துக்குச் சேரமான் மாரி வெண்கோவையும், சோழமான் இராச சூயம் வேட்ட பெருநற் கிள்ளியையும் வரவழைப்பதாகத்தானிருந் தார், மாமன்னர். என்ன காரணம் பற்றியோ நமது இளவரசியாரும் எனக்குப் பின் சங்கத் தலைவியாக அமர விருப்பவருமான திருமேனி மறுத்து விட்டார். நமது மாமன் னரே, குறிஞ்சியையும், மருதத்தையும் புனைந்து பாடுவதில் வல்லவர் என்பதை நாமறிவோம். அவரது திருக்குமாரி திரு மேனியார், ஔவைப் பிராட்டியாரிடமும் பின் என்னிடமும் தமிழ் பயின்றார். உருத்திர சன்மரிடம் ஆரியம் பயின்றார். எதிர்காலம் இந்த இருமொழிகளுக்கும் பூசலின்றி புளகித்திருக்கும் என்கிற நம்பிக்கை ஏற்படுகிறது...''

''ஓ... தியாகவல்லிக்கு இப்போது புரி கிறது. ஆரியக் கலப்பால் தமிழ் அழிந்து படுமோ என்கிற பயம் ஏற்பட்டுத் தமிழ்ச் சங்கம் உதயமானது போலும்.''

ஒரு புலவர் கேட்டார்: ''இளவரசியார் ஒரு நாட்டின் தேவியாகப் போகிறவர். இங்கே எவ்வாறு தலைவியாக வீற்றிருக்க முடியும்?''

நல்ல கேள்வி.

மாமன்னர் மறுமொழி பகர்ந்தார்; ''தமிழ்ச்சங்க வளர்ச்சியோட்டியேதான் எனது மருமகனும் வாய்ப்பார்.''

முதலில் அயர்ந்து போனவள் தியாக வல்லி. ஆனால் திருமேனி...

''தலைவராக வீற்றிருப்பவர்கள் இலக்க ணத்தில் மாவல்லமை பெற்றிருக்க வேண் டுமே!'' என்றார் இன்னொரு புலவர்.

இலக்கணப் புலியான ஐயூர் மூலங்கிழார் மறுமொழி தந்தார்: ''ஐயமிருப்பின் சோதிக்கலாமே!''

மாங்குடி மருதனாரும் இளவரசியைநோக்கி ''இவர்கள் ஏன் ஐயப்பட வேண்டும்? இதனைத் தீர்த்துக் கொள்ளட்டுமே இளவரசி!'' என்றார்.

அவளும் ''ஓ'' என்றாள்.

---

''நம்ப தலைவர் டில்லிக்குப் போவ தாகச் சொல்லி விட்டு அமெரிக்கா போகும் விமானத்தில் ஏறுகிறாரே?''

''அவர் எப்பொழுதும் அமெரிக்கா, பிரான்சு வழியாகத்தான் டெல்லி போவார்!'' —ஏ.வி.தேவன்.



அடுத்து—

அந்த 'ஓ'வையே வைத்து ஒரு புலவர் கேட்டார். ''தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் ஓகார ஈறு...''

அவர் முடிக்கவில்லை. பளிச்சென்று திருமேனி சொன்னாள்: ''ஓகார இறுதிஏகார இயற்றே!' இது அல்வழி ஓகார ஈற்று. இடைச் சொல்லானால், 'மான் கொன் எச்சமும் வினாவும், ஐயமும் கூறிய வல்லெழுத்து இயற்கையாகும்!' — ஐயம் தீர்ந்ததா புலவரே?''

கரவொலிகளடங்கியதும், ஐயூர் மூலங்கிழாரே ஒரு கேள்வி கேட்டார்: ''இளவரசி! சொல்லதிகாரத்து வினை இயலில் உயர்திணைத் தன்மைப் பன்மை வினைமுற்று பற்றிய சூத்திரம்?''

''அவைதாம்
அம் ஆம் எம் ஏம் என்னும் கிளவியும்
உம்மொடு வருஉங் கடதற என்னும்
அந்நாற் கிளவியொடு ஆயெண் கிளவியும்
பன்மை உரைக்கும் தன்மைச் சொல்லே.''
ஓ... இவளல்லவோ *முதுக்குறைவி!
வியக்கிறார்கள்...

''நானும் ஒரு கேள்வி கேட்கிறேனே!'' என்றார் சங்கத் தலைவர் மாங்குடி மருதனார்.

''கேளுங்கள் ஆசிரியப் பெருமானே!''

ஒருகணம் மாணவியை நோக்குகிறார். வேங்கைமார்பன் நினைவில் வருகிறான்.

''இளவரசி! பொருளதிகார மெய்ப்பாட்டு இயலில் நான் கையை வைக்கிறேன்.''

கண்களை அகலத் திறந்து கவனிக்கிறாள் திருமேனி.

''நான் வேறு எதையும் கேட்க விரும்பவில்லை. அவத்தைகள் ஆறுபற்றி தொல்காப்பியனார் கூறும் சூத்திரங்கள்?''

திருமேனியின் கண்களில் நீர்படலம். ஆயினும் மெல்லத் தன்னைத் தேற்றிக் கொண்டு முதல் அவஸ்தையைக் கூறுகிறாள்:

''புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்
நகுநயம் மறைத்தல் சிதைவு பிறர்க்கின்மை
யொடு
தகுமுறை நான்கே ஒன்றென மொழிப!''

அவளுக்கு நெற்றி வியர்த்தது.

''அடுத்த ஐந்து?'' என்கிறார் மாங்குடி மருதனார்.

திருமேனி எரிமேனி கண்டாள்?

''அவசியமில்லை ஆசிரியப் பெருமானே! என்னைப் பொறுத்தமட்டில் தொல்காப்பியத்தின் பொருளதிகாரம், தொல்காப்பியர் எழுதியதல்ல என்பது எனது கருத்து!* இலக்கணம் எழுத வந்தவருக்கு எழுத்தும் சொல்லும் இயல்பே! காதலன் என்ன வானான்? காதலி என்னவானாள் என்கிற கவலை எதற்கு? அவர்கள் படுகிற அவஸ்தைகள் எதற்கு? அவசியமே இல்லை. பொருளதிகாரம் என்பதே மொழி இலக்கணத்துக்கு அப்பாற்பட்டது. எனவே அது குறித்த கேள்விக்கு விடை கூற வேண்டிய அவசியமில்லை. எனக்கு உடல்நிலை சரியில்லை. நான் புறப்படுகிறேன்!'' என்றுகூறி எழுந்து கொண்டாள்.

இதில் வியப்பு என்னவென்றால் அவளது அந்தக் கூற்றைப் பெரும்பாலான புலவர்களும், ஆதரிக்கத் தொடங்கிவிட்டார்கள். அவளுக்கு அதில் மகிழ்ச்சி.

மாமன்னர் உக்கிரப் பெருவழுதிப் பாண்டியர், தமிழ்ச் சங்கம் தமிழோடு தமது மனையும் ஆராய்ந்தது குறித்து உள்ளூர பொருளதிகாரத்தை மதித்து தொல்காப்பியரைப் பாராட்டிக் கொள்ளவும் செய்தார்.

ஆறு அவஸ்தைகளின் காரணமாக ஆறு நாட்கள் வரை திருமேனியை எவரும் காண முடியவில்லை. தனிமையில் அவள் அவஸ்தாபேதங்களில் அலைமோதிக் கொண்டிருந்தாள்.

ஆனால் இந்த ஆறு நாட்களாக மாமன்னர் பெருவழுதிப் பாண்டியர் மட்டும் தியாகவல்லியை அடிக்கடி அரண்மனைக்கு அழைத்துக் கொண்டிருந்தார். தியாகவல்லி, தமிழாணைக்குக் கட்டுப் பட்டு உண்மையை உடைக்கிற போது, தொலைவிலிருந்து கவனித்த கனற்கண்களுக்குரியவராயிற்றே அவர்!

ஒருவாறு, ஒரு வார காலமாக, அவஸ்தைகளிலிருந்து மீண்ட திருமேனி, சலனத்துக்கு ஒரு முடிவு காணத் தியாகவல்லியை அழைத்து வருமாறு உத்தரவிட்டு அரண்மனையில் பிரவேசித்தபோதுதான்...

அந்தச் செய்தி பறந்தடித்துக்கொண்டு வந்து சேர்ந்தது. அது: திருமண ஓலை. திருமேனிச் சிலைக்கு மாலையிடும் விசித்திரச் செய்தி.

என்ன அக்கிரமம் இது?

திருமேனி போன்று பொற்சிலை செய்திருக்கிறானாம் வேங்கைமார்பன். அதற்கு மாலையிட்டு மனைவியாக்கிக் கொள்ள நாள் பார்த்து, கோள் பார்த்து ஓலையனுப்பியிருக்கிறானே! மன்னர்கள் அனைவருக்குமே ஓலை அனுப்பி வைத்திருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிறானே!

இந்தப் பூகம்பச் செய்தி, திருமேனியின் பூவனைய செவிகளில் விழுந்த போது...

நந்தவனமான அவளது இதயத்தில் தீ மூண்டு விட்டது.

மெல்லிய கனவுகள் வெடிபட்டு வேங்கை மார்பனை, ஒரு ரகசிய ராட்சஸனாக உரு மாற்றிக் காட்டியது.

அவஸ்தாபேதங்களிலிருந்து திருமேனி இப்போது தான் மீண்டாள். அது ஒரு நல்ல திருப்பம். அதற்குள்ளாக வேங்கை மார்பன் மீண்டும் விதியோடு விளையாடத் தொடங்கி விட்டானே...!

(தொடரும்)

---

* இளம் வயதில் நிறைந்த கல்வி ஞானமுடைய பெண்டிரை முதுக்குறைவி என்றழைத்தனர் சங்ககாலச் சான்றோர். கண்ணகியை 'சிறுமுதுக் குறைவி' என்று பேசுகிறது சிலம்பு.

* இது திருமேனியின் உள்ளுணர்வால் ஏற்பட்ட கருத்து. எனது கருத்தல்ல.

# வேகம்

ஸுஜாதா விஜயராகவன்

சித்திரை கத்தரி. நேரம் நண்பகல். நிற்குமிடம் அனல் வீசும் தார்ச்சாலை. கண்ணுக்கெட்டியவரை மரநிழல் கூடக் கிடையாது.

''ஜமச்சிக் கொளத்துலேருந்து நத்தம் ரோட் போற வழியிலே நல்ல கிராமம் ஏதாவது இருந்தா ஸர்வே பண்ணிடுங்க வேணு. காலேஜ் திறந்து மொதல் டேர்ம்லேயே என். எஸ். எஸ். காம்ப் முடிச்சுடுவோம்'' என்று நயச்சியமாகப் பேசி என்னை அனுப்பி வைத்த கோ-ஆர்டினேட்டரை மனத்தில் வைது கொண்டே நடந்தேன். செருப்பு வார் அறுந்து விட்டது. சைக்கிள் டயர் பங்க்ச்சர். போதுமா? ஒரு மனிதன் விரக்தி அடைந்து சந்நியாசம் வாங்கிக் கொள்ள இன்னும் வேறு என்ன வேண்டும்!

தொலைவில் கேட்ட ஒரு கார்ஹார்ன் கோபியர் காதில் விழுந்த கண்ணன் குழலாய், கானாம்ருதமாய் இனித்தது. கட்டை விரலை உயர்த்தியதும் தான் அது ஒரு பென்ஸ் கார் என்று பார்த்தேன். சந்தேகத்துடன் விரலை இறக்கும் போது கார் என்னருகில் நின்றே விட்டது. உள்ளே ஒரு டிரைவர். பின் ஸீட்டில் முதலாளி போலும். சுருக்கமாக என் நிலையை விவரித்ததும் கார் பின் கதவு திறந்து. டிரைவர் இறங்கி என் தொத்தல் சைக்கிளைப் பாதாளக் கிணறு போன்ற டிக்கியில் வைத்து மூடினான்.

''ரொம்ப தாங்க்ஸ் ஸார்'' என்று சொல்லியவாறு உள்ளே அமர்ந்த போது தான் முதலாளியைப் பார்த்தேன். சின்ன வயதுதான். முப்பது அல்லது முப்பத்திரண்டு. செல்வச் செழிப்பு. ஸில்க் ஜிப்பா, பின்னி ஸில்க் வேட்டி. விரல்களில் பளிச்சிட்ட மோதிரங்கள், ரோலெக்ஸ் வாட்ச் இத்யாதியில் தெரிந்தது. கூலிங் கிளாஸ் அணிந்திருந்ததால் கண்கள் சரியாகத் தெரியவில்லை. பேச்சில் பெரிய மனிதத்தனம் ஒலித்தது.

''இத பாருங்க. எம் பொண்டாட்டிக்குக் கார்ன்னாலே அசாத்திய பயம். வண்டியிலே ஏறினா அவ படுத்தற அமர்க்களத்துலே ஓட்டறவங்களுக்கு வெலவெலத்துப் போயிடும். பின் ஸீட்லே ஒக்காந்துக்கிட்டு ''மெள்ளப் போங்க, ஐயோ அப்பா''ன்னு கத்திக்கிட்டே வருவா'' என்றான்.

சம்பாஷணைக்கு ஒரு நூல் கிடைத்து விட்டது என்ற சந்தோஷத்தில் நன்றாகச் சாய்ந்து உட்கார்ந்தேன். ''அப்படி ஒரு பயமா ஸார்?'' என்று கேட்டு வைத்தேன்.

''பயம்னு உங்க பயம் எம் பயம் இல்லே ஸார். லாங் டிஸ்டன்ஸ் போனாக் கூட 60 கிலோ மீட்டர் வேகம் தாண்டக் கூடாது. எங்கேயாவது தொலைவிலே ஒரு கிராமம் வரும். இங்கேயே பிடிச்சுக் கத்த ஆரம்பிச்சுடுவா. ''மெள்ளப் போங்க. ப்ளீஸ் ஸ்லோ பண்ணுங்களேன். ஐயோ கோழி வந்துரும். குஞ்சு வந்துரும். கொழந்தைங்க ஓடியாரும்''னு கூப்பாடு போடுவா.''

திடுக்கிட்டு உட்கார்ந்தேன். திடீரென்று அவன் தன் மனைவி மாதிரியே பெண் குரலில் பேசிக் காட்டியது என்னவோ போல் இருந்தது. சில பேருக்கு இந்த மாதிரி மானரிஸம் உண்டு என்பது ஞாபகத்துக்கு வர, சமாளித்துக் கொண்டேன்.

''கல்யாணமான புதுசுலே காரை நான் ஓட்டினா என் பக்கத்துல ஒக்கார மாட்டா. பின் ஸீட்ல போய் ஒக்காருவா. இது எவ்வளவு அவமானமா இருக்கும் சொல்லுங்க. கேட்டா 'நீங்க கார் ஓட்றது எங்களுக்கும் இடிச்சுடுமோன்னு பயமாயிருக்கும்பா' நான் கொஞ்சம் ஃபாஸ்ட்டாத்



தான் ஓட்டுவேன். ஆனா மதுரை சிட்டி லிமிட்டுக்குள்ளாற தேர்ட் கியருக்குமேலே போக முடியாதுங்களே. நீங்க பாத்திருப் பீங்க இல்லே. அது கூட வேகம்னு அலறுவா. கட்டாயப்படுத்தி முன்னாலே ஒக்காரவச்சா ஸீட்டை ரெண்டு கையாலேயும் இறுக்கிப் பிடிச்சுக்குவா. வேர்த்து வேர்த்துக்கொட் டும். வண்டி எதுக்க வந்தா அவ கால் ப்ரேக் போடறா மாதிரி முன்னாலே போய் அழுத்தும். எல்லாத்துக்கும் மேலே முருகா, முருகான்னு வேற சொல்லிக்கிட்டே வருவா, என்னே மந்திரம் போட்டுக் காப்பாத்துறா ளாம்.''

இந்த எரிச்சல் கொட்டித் தீர்த்தால் ஒழியத் தீராது என்று பேசாமல் இருந்தேன்.

''கார் ஓட்டக் கத்துக் குடுத்தா சரியாப் போயிடும்னு நினைத்துக் கத்துக் குடுத்தேன். சுமாரா ஓட்டினா. ஆனால் மதுரை டவுனுக் குள்ளே போனாச் சரி. சிம்மக்கல்லில ஓட்ட மாட்டேன், நெல்லூப் பேட்டையிலே ஓட்ட மாட்டேன்னு தகராறு. மனுஷங்க ரோட்லே நடக்கறாங்களாம். சைக்கிள் ரிக்ஷா சன்னு பீன்னுன்னு வருதாம். இவளுக்காக இங்கே மவுண்ட் ரோடு போட முடியுமா? லோலோன்னு ஒரே பொலம்பல். டிரைவ ரெல்லாம் சின்னம்மாவுக்கு வண்டி எடுக்க மாட்டேன்னு ஸ்ட்ரைக். 'அவுங்க பண்ற அமர்க்களத்துலே எங்களுக்குக் கைகாலே ஓடலே மொதலாளின்னு கம்ப்ளெயின்ட். என்ன பண்ணச் சொல்றீங்க'' என்று அலுத்துக் கொண்டான்.

''அவுங்க சின்ன வயசிலே ஏதாவது விபத்துலே மாட்டிக்கிட்டாங்களா?'' என்று சந்தேகம் கேட்டேன்.

''அப்படியெல்லாம் ஒன்னுமே இல்லே. நான் ஒரு ஸைக்யாட்ரிஸ்ட் கிட்டே கூடக் கொண்டு காட்டினேன்.''

''அவர் என்ன சொன்னார்?''

'''அவளுக்கு ரொம்ப மென்மையான மனசு. வலி பொறுக்காத ஒடம்பு. வய லன்ஸ் எதுவும் அவங்களுக்குத் தாங்காது'னு முடிச்சுட்டார். அது என்னவோ வாஸ்தவம் தான். பூப்பறிச்சாக் கூடச் செடிக்கு வலிக்கும்னு நெனப்பா. எந்த சாமானையும் அவ கையாள்றதைப் பார்த்தா அவ் வளவு மென்மையா இருக்கும்.



ரோட்லே பத்து பேர் கும்பல் கூடிட்டா ஆக்ஸிடன்டோன்னு பயந்துருவா, அங்கே ஏதாவது கன்றுவியைப் பார்த்துருவோ மோன்னு காரை உடனே வேகமா அந்த இடத்தைத் தாண்டிரச் சொல்லுவா...''

''சில பேர் மனசு ரொம்ப கோழைங்க'' சமாதானம் செய்ய முயன்றேன். ''எங்க அம்மா கூட பாருங்க...''

அவன் என்னை முடிக்க விடவில்லை.

''பார்ட்டிகுலரா நான் ஓட்டினு அவளுக்கு வெறியே ஏறிடும். கண்ணை மூடித்தலையைக் குனிஞ்சுக்கிட்டே வருவா. முன்னாலே போற வண்டியை ஓவர்டேக் பண்ணக் கூடாது. 'லாரி முதுகுக்கடியிலே காரோட மூக்கைக் கொண்டு சொருகாதீங்க'ம்பா. முன்னாலே வேகமாப் போற லாரி திடீர்னு பின் வாங்குமா என்ன? பிரேக் போட்டா ''அம்மாடி''ன்னு வயித்தை அமுக்கிக்குவா. எவ்வளவுதாங்க பொறுக்கறது?''

இந்த கேள்விகளுக்கெல்லாம் என்ன பதில் சொல்வது என்று புரியவில்லை. திடீரென்று அவனே அழத் தொடங்கி விடுவானோ என்று கூட ஒரு பைத்தியக்காரத்தனமான அச்சம். பேச்சை மாற்ற எண்ணி, ''உங்களுக்குப் பசங்க...'' என்று இழுத்தேன்.

''பசங்களா...?'' என்று ஒரு விரக்திச் சிரிப்பு. சற்று நேரம் பேச்சே இல்லை. திடீரென்று நினைத்துக் கொண்டவன் போல் தொடங்கி விட்டான். ''திருப்பரங்குன்றம் போனோம் ஒரு தடவை. கூட ரெண்டுமூணு கார். கஸின்ஸ், ஃப்ரெண்ட்ஸ் எல்லோரும் வந்திருந்தாங்க. திரும்பும்போது ராத்திரி பத்து மணிக்கு மேலே ஆயிடுச்சி. ரோட் நல்லா இருந்தது. பைபாஸ் ரோட் வேற. காலியா கெடந்தது. நிலா வெளிச்சம். ஒரு குஷியிலே ஸ்பீடு கௌம்பினேன். என் கஸின்ஸ் தொரத்திக்கிட்டே ரேஸ் விடறாங்க. அங்க புடிச்ச வேகம் அரசரடி, சிம்மக்கல், யானைக்கல் தாண்டி கோரிப் பாளையம் வரை யாரும் என் வண்டிகிட்ட நெருங்க முடியல்லே. அப்புறம் கிட்ட வந்துட்டாங்க. மறுபடி ஸ்பீட் எடுத்துச் சொக்கிகுளத்துலே வண்டி பறந்து பறந்து ஓட்டினேன். கார்னர் எல்லாம் ஃபோர்த் கியர்லியே வளைச்சுக் கட்டினேன். இது என்ன மாதிரி வண்டி! சட்டை விரலாலே லேசாத் தொட்டாப் போறுமே. பஞ்ச கல்யாணிக் குதிரை மாதிரி பாஞ்சு பாஞ்சு போச்சு. கஸின் வண்டி கூட பென்ஸ்தான். இருந்தும் அவனாலே நெருங்க முடியல்லே. போர்டிகோ வரை போட்டி. வண்டி நின்னதும் தான் இவளைப் பார்த்தேன். கவுந்து படுத்திருந்தா. சட்டுனு எழுந்து பாத்ரூமுக்குப் போயிட்டா. சேத்தைக்கெல்லாம் அம்மா வந்து பதர்றாங்க. டாக்டர் சகுந்தலாவுக்கு போன் பண்ணுடான்னு. டாக்டர் உடனே வந்துட்டாங்க.''

இந்த இடத்தில் அவன் சட்டென்று மௌனமாகிப் போனான். எனக்கோ சஸ்பென்ஸ் தாங்கவில்லை.

''அபார்ஷன் ஆயிடுச்சி. டாக்டர்அதிர்ச்சி தான்னு என்னைத் திட்டினாங்க.''

சட்டென்று எனக்கு எல்லாம் புரியத் தொடங்கியது. அவனுக்கு ஆறுதல் சொல்வதா, வேண்டாமா என்று நான் முடிவு செய்யுமுன் அவன் தொடர்ந்தான்.

''அதுக்கப்புறம் நிலைமை இன்னும் மோசமாப் போச்சு. அவ கொழந்தைய நான் கொன்னுட்டேனும், எப்படியிருக்குப் பாத்தீங்களா? இந்த ஒரு பேச்சுக்கே நான் அவளை டைவர்ஸ் பண்ணியிருக்கணும்...''

பேச்சு ரொம்பவும் அந்தரங்கமாகப் போவதைப் பார்த்துப் பதற்றத்துடன் குறுக்கிட்டேன். ''அதிர்ச்சியிலே அவங்க அந்த மாதிரி ஏதாவது பேசியிருப்பாங்க. இதுக்கெல்லாம் அர்த்தமே இல்லை. நீங்க வீணு மனசைப் போட்டு ஒளப்பிக்காதீங்க.''

''ஒரு கோழிக் குஞ்சைக் கூட நான் கார் ஓட்டிக் கொன்னதில்லீங்க. எப்பேர்ப்பட்ட கண்ட்ரோல் தெரியுங்களா எனக்கு. கொடைக்கானல் மலை ஏறும்போது காரை நிறுத்திட்டு டயர் பின்னாலே கோழிமுட்டையை வெப்பாங்க. ஃப்ரெண்ட்ஸ் கிட்ட சாலஞ்ச் பண்ணி அவங்க வெச்ச முட்டை ஒண்ணு கூட ஒடையாம காரை சர்ருனு மேலே எடுப்பேன். ப்ரேக்கை ஒரு தடவை கூட மிதிக்காம மேலேயிருந்து கீழே வரை வருவேன். ஸ்பீட் கண்ட்ரோல் வெறும் கியர்லியே பண்ணுவேன். எந்த ஸ்பீட் போனாலும் டக்குன்னு சொன்ன எடத்துலே ப்ரேக் போட்டு நிறுத்துவேன். எங்க அப்பா மட்டும் தடுக்கலேன்னு சோழவரம் ரேஸ்ல ஓட்டியிருப்பேன். பதினாறு வயசிலே யிருந்து கார் ஓட்டறேன். இவ என்னன்னு நெனைச்சுக்கிட்டான்னு தெரியலே.''

குரலில் ஆத்திரம் அனல் வீசியது. வசமாக மாட்டிக் கொண்டோம். இது ஒரு சரியான கேஸ் என்று பயம் தோன்றியது. ''என்னைப் பாண்டியன் ஹோட்டல் பக்கம் எறக்கிடுங்க'' என்றேன்.

ம்ஹூம். பேச்சை மாற்றவோ, நிறுத்தவோ முடியவில்லை.

கூலிங்கிளாஸ் கண்களை மறைத்தாலும் குரலிலேயே கோபக் கண்ணீர் ததும்பியது.

---

*மனைவி:* ''நம்ம புள்ளையப் பொறுப்பு இல்லாதவன் என்று திட்டுவீர்களே! இப்பப் பார்த்தீங்களா மந்திரி ஆகி விட்டான்!''

*கணவன்:* ''இப்ப மட்டும் என்ன வாழுதாம்? இலாகா இல்லாத மந்திரி தானே?''

—பால. கோபால்சாமி.



கார் மெதுவாக ஊர்ந்து கொண்டிருந்தது. டிரைவர் எதையுமே காதில் வாங்காதவன் போல் நேரே சாலையை வெறித்த வண்ணம் காரைச் செலுத்திக் கொண்டிருந்தான்.

"என்னைப் பார்த்தாலே கத்துவா. நீங்க வண்டி ஓட்டி ஆக்ஸிடெண்ட் ஆகி அதிலே தான் எனக்குச் சாவு" அப்படிம்பா. "எனக்கு நல்ல சாவு கிடையாது. விபத்திலே தான் சாகப்போறேன். உங்ககையாலே"ம்பா. எவ்வளவு தான் பொறுக்க முடியும்? பொறந்த வீட்டிலே கொண்டு விட்டேன். ஆறு மாசம் கழிச்சு வந்தா. கொடைக்கானல் போயி ஒரு வாரம் தங்கினா அவளுக்கு சந்தோஷமா இருக்கும்னு நெனைச்சு அவளும் நானும் போனோம். எங்க சொந்த வீடே இருக்கு. ஒரு வாரம் இருந்தோம். நல்லபடியாத்தான் இருந்தா. பில்லர்ராக்ஸ், போட்டிங், பேர்ஷோலா எல்லாம் போனோம். ரெண்டாவது ஹனி மூன்தான். திரும்பி வரும்போது டிரைவருக்குத் திடீர்னு காய்ச்சல் வந்துடுச்சு. அவனை ரெண்டு நாள் தங்கச் சொல்லிட்டு நானே ஓட்டினேன். அவ்வளவு தான். வேதாளம் முருங்கை மரத்துலே ஏறிடுச்சு. கத்த ஆரம்பிச்சா. எனக்கு வந்த கோவத்துலே சன்மன் தெரியாம ஸ்பீடா ஓட்டினேன். எல்லா வளைவும் ஃபோர்த் கியர்லே வளைச்சு வளைச்சு ஓட்டினேன். கடைசி வளைவுலே எதிர்க்க ஒரு லாரி திடீர்னு வந்திடுச்சு. ஹார்ன் கூட செய்யலே. எனக்கே சதிகலங்கிப்போச்சு. அவனும் ப்ரேக் போட்டான். நான் கிட்டத் தட்ட ப்ரேக் மேலே எழுந்தே நின்னிட்டேன். சத்தத்திலே அக்கம் பக்கத்து ஜனங்கள்ளாம் ஓடியாந்துட்டாங்க. டயர்த் தடம் ரெண்டும் தார் ரோட்லே பதிஞ்சே போச்சுங்க. எறங்கிப் போய் அவனே நல்லாக் கத்திட்டு வந்தேன். நெஜமாவே ஒரு மயிரிழையிலே ஒரு பெரிய விபத்தைத் தவிர்த்துட்டேன்.

திரும்பக் கார்லே வந்து ஏறிக்கிட்டு வண்டியைக் கௌப்பினேன். இவ பக்கமே திரும்பலே. ப்ரேக் போட்ட போது பயங்கரமா ஒரு கூச்சல் போட்டுட்டுத் தலையைக் கவுத்துக்கிட்டா. எனக்கு ஒரே எரிச்சல். வீட்டிலே காரை நிறுத்திட்டு எறங்கி உள்ளே போயிட்டேன். அவ எறங்கலே. வேலைக்காரன் சாமானை எறக்கப் போயிட்டுக் கூப்பாடு போட்டான். என்னடான்னு எல்லாரும் ஓடிப் போய்ப் பார்த்தோம். சீட்லே அப்படியே கெடக்கா. உயிர் போயிடுச்சி. அதிர்ச்சியாம். ஹார்ட் நின்னு போச்சாம். இதிலே என்ன வேடிக்கை பார்த்தீங்களா ஸார். விபத்து நடக்கவேயில்லே. ஆனா அவ போயிட்டா. நடக்காத விபத்திலே அவ போயிட்டா அதனாலே நான் பழி ஏத்துக்க முடியுமா?" என்று கேட்டவாறு பெரிதாகச் சிரிக்க ஆரம்பித்தான். விக்கலும், விம்மலும் கேவலுமாக வெளிப்பட்ட அந்தச் சிரிப்பைக் கேட்டு உறைந்து போனேன்.

கார் மெதுவாகப் பாண்டியன் ஹோட்டல் அருகில் வந்து நின்றது.

# பட்டுப் புடவைப் பரிசுத் திட்டம்



போட்டி 10 : கோடையில் குளுமை

இந்தக் கோடை என்றில்லை இதற்கு முன்பும் கோடைக்காலத்தில் உடலிலோ, மனத்தளவிலோ உங்களைக் குளுமையாக்கிய அனுபவம் ஏதேனும் உண்டா? சுருக்கமாக எழுதப்பட்ட ரசமான அனுபவம் பிரசுரமாகிப் பரிசு பெறும். கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். உறையின் மீது "கோடையில் குளுமை" என்று குறிப்பிடவும். குலுக்கல் முறையில் ஒரு வாசகர் (இரு பாலாரும் போட்டியில் பங்கேற்கலாம்.) பட்டுப் புடவை பரிசு பெறுவார்.

முடிவு தேதி: 23.7.84.

ஒவ்வொரு வாரமும் போட்டிகளில் பங்கு பெற்றால், 43 பட்டுப் புடவைகளுள் ஒன்றை நீங்கள் பெறும் வாய்ப்புள்ளது.

என் பெயர் : ...............................

விலாசம் : ...............................

...............................

# கோடையில் குளுமை

உங்களுக்குத் தேவை இவைதான்:
சாந்தமுள்ள மனநிம்மதி
சக்தியுள்ள உணவுகள்.



ஆம். குழந்தைக்கு பாலூட்டத் தயாராகும் நீங்கள் கவனத்தில்கொள்ள வேண்டியது மிக எளிய விஷயம்; மன நிம்மதியோடு பாலூட்டுங்கள். அதிகமாக பால் சுரப்பதற்கு உதவிடும் உணவுகள் அனைத்தையும் உண்ணுங்கள்.

## கவலைப்படுவதை நிறுத்துங்கள்

கவலைப்படுவது உங்களுக்குத் தீங்கு விளைவிக்கும்—என்றால், உங்கள் குழந்தைக்கும்தான். கவலைப்படுவதால் உங்களுக்கு நோய் ஏற்பட்டு பால் வற்றிவிடும்.

நோய்ப் பிரச்சனைகள் எதுவும் உங்களுக்கு இருந்தால், அலட்சியமாய் இருந்துவிடாதீர்கள்; டாக்டரிடம் செல்லுங்கள் அவரை உங்கள் மூத்த நண்பராய்க் கருதுங்கள்.

## ஆரோக்கியமான உணவைத் துவக்குங்கள்:

உடலுக்கு உகந்த ஆரோக்கிய உணவு எது என்பதை அறிந்திட பிரமாதமாக நூல் நிலையத்திற்குச் சென்று புத்தகங்களைப் புரட்டுவதோ, கலோரிப் பட்டியலைப் பார்ப்பதோ அவசியமில்லை. உங்களுக்குத் தேவை பொது அறிவுதான். உதாரணமாக, குழந்தையின் வளர்ச்சிக்கு புரதம் அதிக அளவில் தேவைப்பட்டால் அதை வழங்கக்கூடியவை, உடல் வளர்ச்சியை உருவாக்கும் பால், முட்டை, மாமிசம் ஆகும். அவற்றை நீங்கள் உண்ண வேண்டும்; புரதம் செறிந்த உணவுப் பானங்களை அருந்த வேண்டும். புரதச்சத்தை அதிக அளவில் நீங்கள் பெறுவது, உங்கள் குழந்தையும் பெறுவதாகும்—உங்களிடமிருந்து. மிகவும் முக்கியம் என்னவென்றால் கார்போஹைட்ரேட்டுகள் அதிகம் கூடாது. காரணம் அது பாலின் தரம் மற்றும் அளவைப் பாதிக்கும்.

இதுபோன்ற எளிய நடவடிக்கைகள்கூட, உங்கள் குழந்தை முறையாக முலைப்பால் குடித்திட உதவும். உடல் நிலை மோசமாக பாதிக்கப்பட்டிருக்கும் பட்சத்தில் உங்கள் குழந்தைக்கு நீங்கள் மாற்றுப்பால் தேர்ந்தெடுக்க வேண்டும்.

## ஸ்ப்ரே ட்ரை செய்யப்பட்ட அமுல்ஸ்ப்ரே

அமுல்ஸ்ப்ரே-நன்கு சமச்சீராக கலக்கப்பட்ட சத்துக்களுடன் கூடியது—பிரதம தரமுள்ள புரதம், ஜீரணிக்க எளிதான கொழுப்பு மற்றும் கார்போஹைட்ரேட்டுகள், சரியாகக் கலந்துள்ள வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள்.

ஏற்கனவே கொதிக்க வைத்த வெதுவெதுப்பான நீரில் அதைக் கலப்பது எளிது. முன்னாலேயே அதை பசைபோல் தயாரிக்கவேண்டிய அவசியம் இல்லை.

## சிக்கனமானது

டின்னில் அடைக்கப்பட்டுள்ள குழந்தை உணவுகளில் மிகவும் சிக்கனமானது, அமுல் ஸ்ப்ரே. காரணம், அது இந்தியாவின் 'வெண்மைப் புரட்சிக்கு' முன்னோடியான நவீன பால் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டது.

ஆனால் கொதிக்க வைத்த நீர், சுகாதார முறையில் கிருமி நீக்கம் செய்யப்பட்ட பாத்திரங்கள் மற்றும் பால் புட்டிகள் உபயோகித்தலை உறுதி செய்து கொள்ளுங்கள். பால் கலக்கப்படும்போது அதிகம் நீராகி விடுவதை தவிர்ப்பதற்கும், போதுமான ஊட்டச் சத்துக்களை உறுதி செய்வதற்கும் டின்மீது குறிப்பிட்டுள்ள வழிமுறைகளை கவனமாக பின்பற்றுக.




# அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்கு அடுத்ததுதான்.**

**இலவசம்! அமுல் வளர்ப்பு வழி—**

நூலில் அடங்கியுள்ளவை: கருத்தரித்தல், பேறு காலத்திற்கு முன் கவனிப்பு, பிரசவம், தாய்ப்பால் ஊட்டுதல், வெளியில் கிடைக்கும் உணவு வகைகள், லேசான தானிய உணவு தருதல், குழந்தையின் அன்றாட கடன்கள், குழந்தையின் வளர்ச்சி, நோய்த் தடுப்பு, முதலுதவி, பொதுவான நோய்கள், நோயுற்ற குழந்தையைப் பாதுகாத்தல் தமிழ், இந்தி, மராத்தி, குஜராத்தி, ஆங்கிலம், தெலுங்கு மற்றும் மலையாள மொழிகளில்.

உங்கள் பெயர் மற்றும் முகவரியுடன் ரூ. 1.25 தபால் தலை ஒட்டி எழுதுக இம் முகவரிக்கு: தபால் பெட்டி எண் 10124, பம்பாய் 400 001.



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட்,
தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத் மாநிலம்.

ASP/AS-TAM7/83

# அவருக்கென்றும் ஒன்று!



உஷா சுப்ரமண்யம்

சீனுவுக்கு இருந்த கோபத்தில் சீதாவை நிமிர்ந்து பார்க்க விரும்பவில்லை.

தட்டைக் கையில் வைத்துக் கொண்டு, தானும் இப்போது சேர்ந்து சாப்பிட உட்கார்ந்தால், அப்பாவின் கோபம் அதிகமாகுமோ என்ற பயத்தில், திரு.திரு என விழித்தபடி அம்மாவின் சமிக்ஞைக்குக் காத்திருந்தாள் சீதா.

''வாயேண்டி நீயும்'' அம்மா அழைத்த பிறகே வந்து, அப்பாவிடமிருந்து சற்றுத் தள்ளியே அமர்ந்தாள். சீதா இருவர் இலையிலும் பரிமாறினாள். ''இன்னும் கொஞ்சம் சாத்துமது சாய்க்கட்டா?''

''போணியோட தலையில் சாய்'' —சீனுவின் குரலில் குழந்தைத்தனமான ஆத்திரம் இருந்தது.

''ஏண்டி சீது... அப்பா மூஞ்சியைப் பாத்துண்டு நீ ஏண்டி பிரமை பிடிச்சாப்பல சோத்தை அளையறே... ஒழுங்காக் கலத்தைப் பார்த்துச் சாப்பிடு...''

''சாப்பிடு, சாப்பிடு... உங்கம்மா சொல்றதைக் கேட்டுண்டுச் சம்ப்ரமமாச் சாப்பிடு. வேற எதுக்கும் துப்பில்லேன்னாலும்எல்லாரும் வேளைக்கு ஒழுங்காக் கொட்டிக்கோங்கோ''

அப்பாவின் கோபத்தின் இலக்கு தான் இல்லை. இந்தக் கோபமோ, பேச்சோ எதுவும் பாதிக்காமல், பெரிய எழுத்துப் பாரதம் படிக்கும் தாத்தா தான் என்று தெரிந்தாலும், சீதாவின் கன்னம் சிவந்து கண்கள் பொழிய ஆரம்பித்தன.

சீனு எழுந்து கைகழுவிய பிறகு, அவர் தட்டையும் சேர்த்து எடுத்த சீதா அம்மாவைப் பார்த்து முறைத்தாள். ''நான் இப்ப கல்யாணம் இல்லேன்னு அழுதேனுக்கும், எல்லாம் உன்னால தான். இப்படி ஆளுக்கு ஆள் மிரட்டினாப் பாரு.''

சீதா வழக்கம் போல் சிரித்தாள். தன்னைத் தாண்டிப் புழக்கடைப் பக்கம் அவள் செல்லும்போது, மென்னத் தோள் மேல் கைபோட்டாள். ''அப்படியெல்லாம்இடக்கு பேச்சுப் பேசப்படாதுடி. தங்கம்...''

''தங்கமுமாச்சு, வெள்ளியுமாச்சு... அது ரெண்டாலும் தான் இத்தனை ப்ராப்ளமும்.'' சீதா, முணுமுணுத்தபடி நகர்ந்தாள்.

பேண்ட், ஷர்ட், ஷூ அணிந்து ஆபீசுக்குக் கிளம்பத் தயாராக இருந்த சீனுவின் தலை மட்டும் சமையலறைக்குள் எட்டிப் பார்த்தது. சீதா அரிவாள் மணையில் பழங்களைத் தோல்சீவி நறுக்கிக் கொண்டிருந்தாள்.

''மாமாவுக்கும் பழம் திருத்தியாறதாக்கும். அபிஷேகம், நைவேத்தியம் தான் குறைச்சல். தோ பாரு... சாயங்காலம் நான் வரதுக்குள்ள அவர்கிட்ட ரெண்டுல ஒண்ணு முடிவாக் கேட்டு வச்சுடு...''

சீதா பதிலொன்றும் பேசாமல், தலையை நிமிர்த்திக் கணவனைப் பார்த்து விட்டு மறுபடியும் குனிந்து கொண்டாள். ஷூவின் டக், டக் ஓசை தூரத்தில் சென்று கரைந்தது.

பழத்தை எடுத்துச் சென்ற போது, கிழவர் ஈஸிசேரிலேயே அசந்திருப்பது தெரிந்தது. ''அப்பா பழம்.''

''வெச்சிட்டுப் போம்மா...சீனு ஆபீசுக்குப் போயாச்சா?''

''உம்... நீங்க பழத்தைச் சாப்பிட்டு விட்டுப் பெஞ்சில் படுத்துக்கோங்கோ... நாற்காலி கழுத்தைச் சுளுக்கிக்கும்...''

கிழவர் எழுந்திருக்க மிகவும் சிரமப்பட்டார். 'சட்'டென்று பாலன்ஸ் இல்லாமல் விழப்போனவர் கையில் கைத்தடியைக் கொடுத்தாள். தொட்டாலே 'பட்' என்று உடைந்து போய் விடுமோ என்பது போல் ஒரு நெட்டித் தோற்றம். விரல்கள் ஒவ்வொன்றும் அசாத்யமாய் நீண்டு,நரம்புகள் துருத்தி, காய்ந்த செடியின் வதங்கிய தண்டு மாதிரி இருந்தது. எழுபத்தைந்து வயதுக்கு இந்த மூப்பு ரொம்ப அசாதாரணமோ என்று கூடத் தோன்றியது.

''இந்த வாக்கிங் ஸ்டிக்கைத் தரையில் ஊன்றினா வழுக்கறது. சீனுகிட்ட கீழே ஒரு ரப்பர் பொருத்திண்டு வான்னு சொன்னேன்.''

என்ன பதில் சொல்வது? அவரவர்கள் வேலையும், கவலையுமே தலைக்கு மேல் இருக்கிறது. இதுக்கெல்லாம் யாருக்கும் நேரமில்லை என்று சொல்ல முடியுமா? பழைய சைக்கிள் டயரிலிருந்து ஒரு துண்டு கத்தரித்து எடுத்து 'பெவிகால்' போட்டு ஒட்டிப் பார்க்கணும்.

மணையைத் தலையில் சாய்த்துப் படுத்து வார இதழ் ஒன்றைப் புரட்டிய போதும் மனம் என்னவோ மாமனாரிடம் தான் இருந்தது. நாலு வருடம் முன்பு இந்தத் தளர்ச்சி இல்லை. மாலை ஐந்து மணியானால் பேண்ட், ஷர்ட் அணிந்து டக், டக் என்று கைத்தடி சப்திக்க வாக்கிங் கிளம்பிவிடுவார். தெருக்கோடியில் ரிடையர்ட் எக்ஸைஸ் இன்ஸ்பெக்டர் வைத்தியநாதனும், சிங்கராசாரி தெருவில் தாத்தாச்சாரியும் சேர்ந்து

கொள்வார்கள். மூவருமாக உலக அரசியல் நடப்புக்களை அலசியபடி மெரீனா பீச்வரை நடப்பார்கள். அங்கே காங்கிரீட் திண்ணையில் சிறிது நேரம் உட்கார்ந்து காற்று வாங்கி விட்டுத் திரும்பும்போது பெருமாள் கோவிலைப் பிரதட்சிணமாக வருவார்கள்.

இரண்டு வீட்டுக்கு முன் கைத்தடிச் சத்தம் கேட்கும் போதே நாணு ரேடியோவை நிறுத்திவிட்டுப் புத்தகத்தில் ஆழ்ந்தது போல் பாவனை செய்வான். சீதா நீட்டிய காலை மடக்கிக் கொள்வாள். ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருக்கும் சீதா எழுந்து ஹால் கதவின் பின்புறம் நின்று கொள்வாள். பார்த்தசாரதி அய்யங்கார் உள்ளே நுழையும் போது கடிகாரம் சரியாக ஏழரை காட்டும்.

''வாட் ஈஸ் தி நியூஸ் டுடே...'' என்று சீனு அப்பாவிடம் பேசத் துவங்குவார். அரசியலுடன் நின்று விடாமல், திருவல்லிக் கேணி வம்புகள், திருவாராதனை விஷயங்கள் எல்லாம் அலசப்படும். எட்டு மணிக்கு அப்பாவும், பிள்ளையும், குழந்தைகளுடன் சாப்பிட அமர்வார்சன். சாப்பிடப் படுத்தும் நாணுவும், சீதாவும் கூடத் ''தாத்தா தோச்



கப்பா'' என்று பருக்கை கூட எறியாமல் சாப்பிடுவார்கள்.

இன்னும் பின்னேக்குச் சென்றால் — மாமியார் இருந்த நாளில் வீடே பெரிய ராஜாங்கமாகத்தான் நடந்தது. எதிலும் ஒழுங்கு. சந்தோஷம். திருமணமாகி வந்த புதிதில் மாமியார் சின்னப் பெண் போல் கணவனை ஓடி, ஓடி உபசரிப்பதை வியப்புடன் பார்ப்பாள் சீதா.

''அந்தப் பிராமணர் விசுவாமித்ர கோத்திரம். கோபம் வரும்'' என்று கணவனைச் சுற்றிச் சுற்றி வருவாள். மாமனுருக்குக் கோபம் வந்து சீதா என்னவோ பார்த்ததே இல்லை. மாமியார் அமர்க்களம் தான் பிரமாதமாக இருக்கும். தலைசாயும் வரைக் கணவன் வேஷ்டியைத் தானே தோய்த்துப் பிழிந்து, நீவி, நீவி, ஒரு சுருக்கமில்லாமல் மேல் கொடியில் உலர்த்தி விட்டுத்தான் இறந்தாள் சீனுவின் அம்மா.

இந்த வீடு, குடும்பம் அத்தனையும் அவர் ஒருவர் திருப்திக்கு மட்டுமே இயங்குவது போல ஓர் அலட்டல். முறுக்கு சுற்றினால் முதல் சுடு அரை வேக்காடு அவருக்குத் தான். அவருக்கு மட்டும் காபி வெள்ளிப் போகிணியில் தான். மாமியார் போய், சீதாவுக்குச் சமையல் வேலையுடன், பாத்திரம் தேய்க்கும் வேலையும் செய்ய முடியாமல், வேலைக்காரி வந்த பிறகு, வெள்ளிப்போகிணியும் தட்டும் பீரோவுக்குள் புகுந்து, இப்போது பாலிஷ் போடப்பட்டு சீதாவுக்குச் சீராகப் போகத் தயாராகக் காத்திருந்தது.

பார்த்தசாரதி அய்யங்காரும் பிள்ளையைப் போல் ப்ரொபஸராக இருந்தவர் தான். அந்த நாளில், அதாவது வாத்தியார்களுக்கு மதிப்பிருந்த நாளில் பாச்சா அய்யங்கார் ஷேக்ஸ்பியர் வகுப்பு நடத்தினால், மற்ற ஆசிரியர்கள் கூட பாடங்கேட்க வருவார்களாம். லயோலாவுக்கு ஒரு பாதர் மர்பி, பிரஸிடென்ஸிக்குப் பாச்சா அய்யங்கார் என்று பிரசித்தம். சீதாவுக்குக் கல்யாணமான புதிதில் பெரிய, பெரிய வேலையில் இருப்பவர்கள் எல்லாம் கார் போட்டுக் கொண்டு வந்து மாமனார் காலில் சாஷ்டாங்கமாக விழுந்து சேவிப்பதை, சீதா வியப்புடனும், பெருமையுடனும் பார்ப்பாள்.

ஒருநாள் வாக்கிங் போகும் போது தலைசுற்றி விழுந்து விட்டார் என்று தாத்தாச்சாரி டாக்ஸி வைத்து அழைத்து வந்தார். அப்பா, அப்பா என்று சீதாவும், சீனுவும் பதறினார்கள். ''வைத்தியநாதன் திடீர்னு ஹார்ட் அட்டாக்கில் போனதிலிருந்து பாச்சா ஆடிப்போயிட்டான்'' என்று வருத்தப்பட்டார் தாத்தாச்சாரி. நரம்பியல் டாக்டர், ''மூளையில் ப்ளட் ஸர்குலேஷன் குறைந்து விட்டது. தனியே எங்கேயும் போக விடாதீர்கள்'' என்றார். தாத்தாச்சாரி தினம் சாயந்திரம் வந்து திண்ணையில் உட்கார்ந்து பேசிவிட்டுச் செல்வார். அப்புறம் தாத்தாச்சாரிக்கும் பி.பி. ஏறியது. ஸ்ட்ரோக் வந்தது. நாலு மாதம் 'இப்போது, அப்போது' என்று ஆஸ்பத்திரியில் கிடந்து, பெட்ஸோர் வந்து இறந்து போனார்.

அதன் பிறகு, பாச்சா அய்யங்கார் நிறையவே மாறிப் போனார். ''ஸார், இது ப்ரொபஸர் சீனுவாசன் வீடுதானே?'' என்று வாசலில் யாராவது கேட்டால், காதில் விழாதது போல், கண்ணையும், காதையும் மூடிக் கொள்ள ஆரம்பித்தார். வேளைக்கு, அளந்து சாப்பிடும் பழக்கம் வைத்திருந்தவர், யாரும் பார்க்காத சமயமாகத் தெரு மூக்கு லாலா கடைக்குச் சென்று மிக்சர் பொட்டலம், காராசேவு என்று ரகஸியமாக வாங்கி வந்து, ஒளித்து வைத்துக் கொண்டு அரைக்கலானார். நாணுவுக்கும், சீதாவுக்கும் தாத்தாவிடம் சுத்தமாக மதிப்புப் போக இது காரணமாயிற்று.

சீனுவாசனுக்குப் பெரிய சம்பளமில்லை. ஆனாலும் வாடகை தர அவசியமில்லாத சொந்த வீடு இருப்பதாலும், சீதாவின் சாமர்த்தியத்தாலும் கஷ்டமில்லாமல் காலம் ஓடியது. சீதா திருமணமான நாளிலிருந்து மாதம் முதல் தேதி பார்த்தசாரதி அய்யங்கார் ரிக்ஷாவில் மளிகை சாமான் ஏற்றிக் கொண்டு வந்திறங்குவார். மாமியாரும், மருமகளுமாக இரண்டு நாள் நோன்பிப் புடைத்து அடுக்குவார்கள். குடும்பம் சீதா நிர்வாகத்தில் வந்த பிறகும் இந்த வழக்கம் தொடர்ந்து கொண்டிருந்தது.

அப்பா வீட்டை விட்டு வெளியே போக முடியாமல் போன பிறகு, சாமானாக வாங்கி வர முடியாவிட்டாலும் அதற்கான பணமாவது தருவார் எனச் சீதாவும், சீனுவும் எதிர்பார்த்தார்கள். ஆனால் கிழவர் பேசாமலிருந்து விடவே, குடும்ப பட்ஜெட்டில் ஏற்பட்ட நானூறு ரூபாய் திடீர் தாக்குதலைச் சமாளிக்க முடியாத சீதா, ''ஏன்னா, அப்பாதான் இவ்வளவு பணம் வச்சிண்டு இருக்காளே, மாசம் ஒரு ஐநூறு ரூபாயாவது தரக் கூடாதா, கேட்டுப் பாருங்களேன்'' என்று சீனுவைத் துணத்தினாள். ஆனால் கிழவருக்கு யாரையும் நெருங்க விடாதபடி, திடீர் திடீர் எனக் கோபம் வந்தது. நாள் கணக்கில் முகத்தைத் தூக்கி

---

பயணி: ''அடுத்து பஸ் எங்கேப்பா நிற்கும்!''

கண்டக்டர்: ''ப்ரேக்டவுன் ஆகிற இடத்தில்!''

—உ. ராஜாஜி.



வைத்துக் கொண்டார். தினம் காலையில் இரண்டு வீடு தள்ளியிருந்த பாங்குக்குப் போவார். என்னதான் செய்வாரோ தெரியாது. தம் இரும்பு அலமாரிச் சாவியைப் பூட்டிப் பத்திரமாய்த் தலையணையடியில் வைத்துக் கொண்டார்.

தீபாவளி என்றால் மருமகள், குழந்தைகளை உடன் கடைக்கு அழைத்துச் சென்று, ''வருஷத்துக்கு ஒரு நாள்தானே, நல்ல காத்திரமா எடுத்துக்கோ'' என்று பொறுக்கி எடுத்துத் துணி வாங்குபவர் இந்த ஆண்டு தீபாவளியை மறந்தவராகவே இருந்தார். தீபாவளிக்கு முதல் நாள் வரை காத்திருந்து பார்த்துவிட்டு, சீனுவும், சீதாவுமாகக் கடைக்குச் சென்று கைத்தறித் துணியாக எடுத்து வந்தனர். சீனு, அப்பாவிடம் அவரது புது வேஷ்டி, துண்டைத் தந்தபோது அவர் இறுகக் கண்ணை மூடிக் கொண்டார்.

பொழுது விடிந்து, அனைவரும் ஸ்நானம் செய்து, கோடித் துணி உடுத்திய பிறகும், கிழவர் வேண்டுமென்றே படுத்துக் கிடப்பதையும் அருகில் ஸ்டூலில் புதுத்துணி உடுத்தாமலே இருப்பதையும் பார்த்து ''சனியன்.. நல்ல நாள் கிழமை கிடையாது. மூஞ்சியைத் தூக்கிண்டு கழுத்தறுப்பு'' என்று சீனு சிடுசிடுத்தபோது சீதா திடுக்கிட்டாள். ஆனாலும் எவ்வளவு இதமாக நடந்தாலும், எதிர்த்து முறைப்பவரிடம் மரியாதை குறைவது சகஜம் என்றே தோன்றியது.

சந்தோஷமாக இருந்த குடும்பத்தில் ஒருவர் நடத்தையால், கொஞ்சம் கொஞ்சமாகப் பிளவு, சிடுசிடுப்பு, கோபம் எல்லாம் தலைதூக்க ஆரம்பித்தது. என்ன காரணம், பதவி இழப்பா, வாழ்க்கை முழுவதும் சேர்ந்து வருவாள் என்று எண்ணிய துணையின் பிரிவா, பரிந்து பழகிய நண்பர்கள் மறைவா, கொஞ்சம் கொஞ்சமாகப் பரவும் செயலிழக்கச் செய்யும் மூப்பின் வேதனையா? அல்லது இனி வாழ்க்கையில் எதிர்பார்ப்பு மரணம் மட்டும் தான் என்ற பயமா?

சீதா மெல்ல ஹாலில் எட்டிப் பார்த்தாள். கிழவர் ஸ்டூலில் படுத்துச் சன்னமாகக் குறட்டை விட்டபடி தூங்கிக் கொண்டிருந்தார். காப்பி கொடுக்கும் போது கட்டாயம் கேட்டுவிட வேண்டும். 'ஸ்ரீரங்கம் வீட்டை விற்ற பணமெல்லாம் சும்மாதானே பேங்கில் வைத்திருக்கிறீர்? இருப்பது ஒரே பிள்ளை. அவருக்கு உதவாமல் அதுவும் தன் சொந்தப் பேத்தி கலியாணத்துக்கு பத்து பவுன் நகை வாங்க உதவாமல், இத்தனை வயதுக்கு மேல் பணத்தை வைத்துக் கொண்டு என்னதான் செய்யப் போகிறீர்? வசதியான இடம், நல்ல படிப்பு பிள்ளைக்கு. நாங்களும் முடிந்த மட்டும் புரட்டிவிட்டோம் என்று விவரமாக எடுத்துக் கூற வேண்டும்.''

மணைப் பலகையை ஓரத்துக்கு நகர்த்தி விட்டு, எழுந்து காபி கலந்து வந்து ''அப்பா'' என்று கதவருகே நின்று கூப்பிட்டாள். குரல் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துக் கொண்டவர், கொஞ்ச நேரம் ஒன்றும் புரியாமல் தடுமாறினார். சமாளித்துக் கொண்டு, ''வச்சிட்டுப் போம்மா'' என்றார்.



''என் கணவர் என்னதான் தப்பு செய்தாலும் அவரை விவாகரத்து செய்ய மனம் வருவதில்லை!''

''என்ன காரணம்?''

''அவரோட சமையல் ருசியே அலாதி!''

—பால. கோபால்சாமி.

---

ஐந்து நிமிடம் கழித்து சீதா வந்தபோது, காபி பாத்திரம் ஸ்டூலில் இருந்தது. பீரோ அருகில் பாச்சா அய்யங்கார் நின்றிருந்தார். நீல அட்டையிட்ட பாஸ் புத்தகங்களை ஒவ்வொன்றாகத் திறந்து பார்த்தார். பர்ஸிலிருந்து பணத்தை எண்ணி லாக்கரில் வைத்தார். மறுபடியும் லாக்கரைத் திறந்து, பணத்தை எண்ணிப் பர்ஸில் வைத்தார். அவர் பீரோவைப் பூட்டும் போது சீதா கண்மறைவாக நின்று கொண்டாள்.

சாவியை எடுத்துக் கொண்டு திரும்பும் போது அவர் முகத்தில் ஒரு திருப்தி, தன்னம்பிக்கை, சந்தோஷம் எல்லாம் கூடி இருந்தாற்போலத் தோன்றியது.

''என்ன சொல்றார் உன் அருமை மாமனார்?'' என்று சீனு இரவு கேட்டார்.

சீதா தயக்கமில்லாமல் பதில் சொன்னாள்: ''நான் அவரைக் கேக்கலே. அவரும் மனுஷர் தானே... பாக்கி இருக்கிற காலத்துக்கு அவருக்குன்னும் ஏதாவது வேண்டாமா...? அவர் காலத்துக்கப்புறம் வேறெங்கே போகப் போறது?''

''மாமனாருக்குப் பரிஞ்சுண்டு ஆரம்பிச்சுட்டியா?'' சீனு சீற, சீதா சிரித்தாள்... ''ஐயே, கோபத்தைப் பாரு... உங்களுக்குக் காலேஜிலே மதிப்பா வேலையிருக்கு. இன்டர்னல்ஸ்காகவாவது காலைப் பிடிக்கிற ஸ்டுடண்ட்ஸ் இருக்கா. ஆத்துக்கு வந்தா ராஜாக்குக் கைகட்டிச் சேவகம் பண்ண நானுக்க. பெருமைப்படத் தங்கமா ரெண்டு குழந்தைகளிருக்கு. உடம்பில தெம்பிருக்கு. இத்தனை பிடிப்பு இருக்கிற போதே கோபம் இப்படி வரது. ''அவர் மூக்கைச் செல்லமாகச் சீண்டினாள். ''வெளியிலே எங்கேயாவது 'லோனுக்கு' ஏற்பாடு பண்ணுங்கோ, இல்லே நான் கவரிங் வளை வாங்கிண்டு, இந்த வளையைச் சீட்டுக்குப் போட்டுடறேன். பெரியவரைக் கேட்டுக் கஷ்டப்படுத்தவேண்டாம். அவருக்குப் பணம் ஒரு ஸப்ஸ்டிடியூட்... இழந்த பல விஷயங்களுக்கு நடுவிலும், இருக்கிற ஒரே உண்மை...''





**ஏ. மேரி, சென்னை-21**

மழை ஆனந்தமாகத் தூறிக் கொண்டிருந்தது.

சன்னமான முத்துக்களை மெல்லிய வெள்ளிக் கம்பிகளில் கோத்து ஆகாசத்துக்கும் பூமிக்கும் இரை விட்ட மாதிரி மழைத் துளிகள் விழுந்து கொண்டிருந்தன.

'பிராயச்சித்தம்' — சிவசங்கரி.

**பி. சத்தியவதி, கோபிசெட்டிப்பாளையம்**

பக்திக்குரிய அதிகாலைப்பொழுது. தன்னைப் படைத்தவனுக்கே தன்னுடைய பயணையும் நல்கும் உயர் நோக்குடையவர்களுக்கொப்ப, தன்னுடைய மணமனைத்தையும் திரட்டிக் காலைக் கடவுளை வரவேற்றுக் கொண்டிருந்தது பவழமல்லி.

'மாவிலைத் தோரணம்' — கிருஷ்ணா.

**டி. நாகராஜன், காரைக்குடி**

இரண்டு பேர் சந்தித்தால் அந்த நிமிஷத்திலேயே வெயில் கொடுமையைப் பற்றிப் பேசும் சித்திரை மாதம். வருஷம் தவறாமல் சில மாத காலத்துக்கு இந்தப் பேச்சை மறந்து விடாமல் பேசிக் கொண்டிருக்கிறார்கள். எதற்காக இப்படிப் பேச வேண்டும்? பேசித் தீர்க்கிற பிரச்னையா வெயில்?

'தீராத விளையாட்டு' — கு. அழகிரிசாமி

**டீ. வைத்தியநாதேஸ்வரன், நெய்வேலி**

"என் நண்பர், மாஜிஸ்திரேட் மருதவனம் பிள்ளை கோர்ட்டிலே மட்டும்தான் கோபமாகக் காணப்படுவார். அதைக் கூட அவர் கோபமென்று ஒப்புக் கொள்வதில்லை. 'நீதியின் உருவம்!' என்று கூறுவார். "என்னவோ மருது! நீதி இப்படி மிரட்டும் உருவிலே இருப்பது எனக்குப் பிடிப்பதில்லை" என்று நான் கூறுவதுண்டு.

'தீர்ப்பளியுங்கள்' — சி. என். அண்ணாதுரை





**விசாலாக்ஷி வரதராஜன், ஹைதராபாத்**

பிள்ளையார் கோயிலுக்குப் பக்கத்திலே ஒரு சந்து-அந்தச் சந்திலே போய்த்திரும்பினா, ஒரு பொந்து. அந்தப் பொந்துக்குள்ள ஒரு இண்டு. அதுல ஒரு இடுக்கு! அதுதான் வீடு

அமுதகரபியில் — து. ரா.

**அ. வேலாயுதம், கரூர்**

மூடியிருந்த ரயில்வே கேட்டுக்கு முன்னும் பின்னும் மத்திய சர்க்காரை மீறி ஒன்றும் செய்ய முடியாத மாகாண சர்க்கார்களைப் போலச் சகல வண்டிகளும் நின்று கொண்டிருந்தன; சகல மக்களும் நின்று கொண்டிருந்தார்கள்.

எழுதியவர்: விந்தன்.

**என். முரளீதரன், விழுப்புரம்**

மகிழ்ச்சியும், ஆரவாரமும் பங்களாவுக்குள் அடங்கி நிற்க முடியாமல் ஒவ்வொரு வாசல் வழியாகவும், ஜன்னல் வழியாகவும் வழிந்தோடின.

'டைவர்ஸ்' — பி. வி. ஆர்.

**ச. கொற்கைநிதி, தஞ்சாவூர்-1**

பிரகாசமான பாரதத் தாயின் முகத்தில் கருந்திட்டு ஏறிக் கறையாய் நிற்கும் நின்டாமை என்கிற இப்புண்ணுக்கு அடையாளமாய் ஒரு சேரி.

'கழுத்தில் விழுந்த மாலை' — ஜெயகாந்தன்.

**ப. ராமலட்சுமி, திருநெல்வேலி**

வீணையின் ஸ்வரக் கட்டுகளாகவே விருநாவாய் நெருடிக் கொண்டிருக்கையில் திடீரென்று ஒருவேளையின் பொருத்தத்தால்







# மறக்க முடியாத வரிகள்





ஸ்வர ஜாதிகள் புது விதமாய்க் கூடி ஒரு அபூர்வ ராகம் ஜனிப்பது போல் அவன் என் வாழ்க்கையில் முன்னும் பின்னுமில்லாது முளைத்தான்.
'அபூர்வ ராகம்' — லா. ச. ராமாமிருதம்.

**ஆர். பொன்னன், கோபிசெட்டிப்பாளையம்**

பிரபஞ்சப் பூச்செடியில் மறுபடியும் ஒரு நாள் மலர் பூத்துக் கொண்டிருந்தது. மார்கழி மாதத்து வைகறை. உலகம் முழுவதுமே பனித்துளி நீங்காத ரோஜாப் பூக்களால் கட்டிய பூமண்டலம் போல் புனிதமானதொரு குளிர் பரவியிருந்தது. மலரின் மென்மையில் கலந்து இழையோடும் மணம் போல் அந்தக் குளிரோடு கலந்து வீசும் இதமான மென் காற்று; 'புலர்ந்தும் புலராமல் இருக்கின்ற பேரரும்பு போல் விடிந்ததும் விடியாத பேதைப் பருவத்து இளம் காலை நேரம்.
'குறிஞ்சி மலர்' — நா. பார்த்தசாரதி.

**இ. இராமலக்குமி, சென்னை-13**

பவழமல்லிப் பூக்கள் தரையில் உதிர்ந்து கிடந்தன. அவளுடைய மருதாணி இட்டுச் சிவந்த பாதங்கள் அதில் அமிழ்ந்து அமிழ்ந்து எழுந்த போது அந்தச் சிவப்புக்கும் பவழமல்லிப் பூக்களில் இருந்த காம்பின் செப்புக்கும் வித்தியாசம் தெரியாத வண்ணம் ஒற்றுமை இருந்ததைக் கவனித்தான் கார்த்திக்.
எழுதியவர்: — வி. ஆர். ராஜம்மா.

**பி. கே. பழனியப்பன், மலையாண்டிப்பட்டணம்**

சாலையின் இருபுறங்களிலும் ஆலமரங்கள் சோலையாக வளர்ந்திருந்தன. ஆதியும்,





அந்தமும் இல்லாத பரம்பொருளைப்போல், அந்தச் சாலை எங்கே ஆரம்பமாகிறது. எங்கே முடிவாகிறது என்று தெரிந்து கொள்ள முடியாததாயிருந்தது. பகவானுடைய விசுவரூபத்தின் அடியும் முடியும் போல.
'அலையோசை' — அமரர் கல்கி.

**எஸ். இந்திரா, மதுரை**

மே மாதம் சென்னைக்கு ஜுரம் வந்து, 104, 105 என்று எகிறியிருந்தது. கடல் காற்று வேலை நிறுத்தம் செய்திருந்தது. நாசச் சாலைகளின் மாய சரத்தில் போக்குவரத்து நடனமாடியது.
'நிர்வாண நகரம்' — சுஜாதா.

**ஜெ. நவீன், திருச்சி**

மற்றொரு இருபத்தி நான்கு மணிநேரங்களைச் சுமந்து கொண்டு ஒரு புது தினத்தின் பிரசவம் வான ஆஸ்பத்திரியின் கீழ் வார்டில் சுகமாய் நிகழ்ந்து முடிந்தது.
'வா' — பட்டுக்கோட்டைபிரபாகர்.

ராகமாலிகா அன்பளிப்பான பட்டுப் புடைவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:

டி. நாகராஜன்,
29, மீனாட்சி அம்மன் கோயில் தெரு,
மீனாட்சிபுரம்,
காரைக்குடி-623 001.





# சொல் ஒன்று வேண்டும்

**26**

ராஜாவின் வருகை, தாராவுக்கு எத்தனையோ விதத்தில் வசதியாக இருக்கிறது...

எவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறான் அவன்...

தாரா, ஆபீசுக்குப் போன பின்பு பாபுவுக்குச் சகலமும் அவன்தான்.

சமையலை முடித்து விட்டுக் கிளம்புபவள், வெளிப் பக்கக் கதவை, ஒரு ஒப்புக்குப் பூட்டி விட்டுத்தான் கிளம்புவாள். வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்கு, வீட்டில் மனித நடமாட்டம் இருப்பது தெரியாது... எக்காரணத்தைக் கொண்டும், ராஜா வெளியே வருவதே இல்லை...

தாரா — இத்தனை தூரம் தள்ளி, மனித நடமாட்டமே அதிகம் இல்லாத இடத்தில் வீடு பார்த்தது — அவளுக்குச் சௌகரியமோ இல்லையோ — ராஜாவுக்கு மிக வசதியாகப் போய் விட்டது...

தாரா ஆபீசுக்குப் போனதும் — நாள் முழுக்கப் பாபுவைக் கவனித்து, வேளா வேளைக்குப் பாலை ஊட்டுவதும், அடிக்கடி ஈரமான துணியை மாற்றுவதும்... ஏன், அவைகளை அருவெறுப்புப் பாராமல் தருவி சாகத் துவைத்து உலர்த்துவதும் கூட அவன்தான்...

முதல்நாள் — அவன், தாரா வருவதற்குள் செய்து வைத்திருந்த காரியங்களை, அவள் வந்தவுடன் பார்த்து விட்டு, குலுங்கிக் குலுங்கி அழுது விட்டாள்.

''உங்களுக்கு என்னதலையெழுத்து ராஜா?''

''எதுக்கு சொல்றே?''

''இந்தத் துணியெல்லாத்தையும் நான் வந்து துவைச்சுப் போட மாட்டேனா...''

''இதுல ஒண்ணும் தப்பில்லே தாரா... மனுஷனுக்கு மனுஷன் இந்த உதவி கூட செய்யலேன்னு... அப்புறம் என்ன இருக்கு.''

''இருந்தாலும் — நீங்க செய்யற உதவி ரொம்ப அதிகம் ராஜா. ஏற்கெனவே நான் உங்களுக்கு ஏகப்பட்ட நன்றிக் கடன் பட்டிருக்கேன்... மேல மேல கடன் அதிகமாயிட்டே போகுது... எப்படித் தீர்க்கறது ராஜா...''

''இதப் பாரு. முதல் முதல்லே நான் உனக்குச் செஞ்ச உதவி — ஒரு கோவில். அவ்வளவுதான். இப்ப செய்யறதெல்லாம் உதவி இல்லே... என்னைக் காப்பாத்திக்க எனக்கு ஒரு புகலிடம் தேவையாயிருந்தது. உன் புருஷனைப் பார்த்துக்க உனக்கு ஒரு துணை தேவையாயிருந்தது... மத்தவங்களை மாதிரி, நான் பாதியில விட்டுட்டு எங்கேயும் ஓட மாட்டேன்... என்னு — ஓடி, ஓடி, கால் சலிச்சுப் போய்த் தான் இங்கே வந்து உட்கார்ந்திருக்கேன். நீயும், மத்தவங்களைப் போல என்னைப் போலீஸ்லே காட்டிக் கொடுக்க முயற்சி செய்ய மாட்டே... என்னு, நான் போலீசுக்குப் போகுது — உனக்குத்தான் பெரிய தலைவலி. இப்படி ஒருத்தருக்கொருத்தர் — வெளியிலசொல்லாம சொல்லக் கூச்சப்பட்டுக்கிட்டு, ஒரு வீட்டுக்குள்ளே வாழ வர்ற நேரத்துல 'நன்றி' — 'கடன்'ற வார்த்தைங்க எல்லாம் எதுக்கு?''

தாரா, மௌனமாக நின்றாள்.



அவனை விடவுமே, ராஜா — பாபுவை மிக நன்றாகத்தான் கவனித்துக் கொண்டான்.

கல் மாதிரி இருந்த சௌதமைக் கொன்ற அதே ராஜாதான், சடலம் மாதிரிக் கிடக்கும் பாபுவுக்குப் பார்த்துப் பார்த்துப் பணிவிடை செய்கிறான்.

எங்கே, கொஞ்சம் வேகமாய்ப் பாபுவைத் திருப்பினால் — அதே சாக்கில் பிராணன் போய் விடுமோ என்கிற பயத்துடன்... பிறந்த குழந்தையைத் தூக்குவதைவிடவும் மிக ஜாக்கிரதையாய்த் தூக்கி எடுத்து, ஈரத்துணியால் உடம்பைத் துடைத்து, எறும்பு கடிக்காமல் இருக்கபவுடர்போட்டு... அவனைக் கவனிப்பது மட்டுமில்லாமல், இரவு சமையலையும் தானே கவனித்துக் கொண்டு...

"இன்னும் எத்தனை நாளைக்கு ராஜா, இந்த அஞ்ஞாதவாசம்?"

ஒருநாள் இரவு, பாபுவின் கட்டிலுக்குக் கீழே, தனது படுக்கையை உதறிப்போட்டபடியே தாரா கேட்கிறாள்.

"நீ என்னிக்கு, கோர்ட்டுக்கு வந்து, நீதிபதி முன்னாலே — 'இந்தக் கொலைக்குக் காரணம் நான்தான்னு சொல்றியோ... அன்னிக்குத்தான் — இந்தச் சண்ணாமூச்சி விளையாட்டுக்கு ஒரு முடிவு கிடைக்கும் தாரா. உன்னோட ஒரு சொல்லுக்காகத் தான் நான் காத்துக்கிட்டிருக்கேன்..."

"நிச்சயமா... அப்படியொரு வார்த்தைய நான் சொல்லுவேன். எந்தப் புருஷனுக்காகப் பயந்து, பயந்து இந்த உண்மையை மறைச்சேனோ... இதோ... அவரே தன்



நினைவில்லாமல் கிடக்கார்... இது மாதிரியான ஒரு அர்த்த ராத்திரி நேரத்துல நான், உங்களோட பேசிக்கிட்டிருக்கிறது மாத்திரம் இவருக்குத் தெரிஞ்சா... சும்மா விட்டிருப்பார்னு நினைக்கறீங்க... இப்பக்கூட, அவருக்கு உணர்வு இல்லேங்கறதை என்னாலே ஏத்துக்க முடியல்லே... நாமப் பேசறதை எல்லாம் கேட்டுட்டுத்தான் இருப்பார். இவர் உயிரோட இருக்கற வரைக்கும், என் வாயிலேயிருந்து — அந்த ஒரு சொல் வராது ராஜா...''

ராஜா, விட்டத்தை அண்ணாந்து பார்த்தபடி உட்கார்ந்திருந்தான்.

மறுநாள்—

வழக்கம் போல ஆபீசுக்குப் போன தாராவுக்கு, திடீரென ஒரு பயம் பிடித்துக் கொள்கிறது...

''ஐயோ, என்ன காரியம் செய்து விட்டோம்...

''அவர் உயிரோட இருக்கற மட்டும் என்னாலே சாட்சி சொல்ல வர முடியாதுன்னு... அவர் போயிட்டா, என் வாய்ப் பூட்டு விலகிடும்னுதானே அர்த்தம்... அப்ப, நானும் இல்லாத சமயத்துல, ராஜா — அவரோட கழுத்தை நெரிச்சுட்டார்னு... எப்பப் போகலாம்னு காத்துட்டிருக்கற உசிரை, கழுத்தை நெரிச்சுத்தான் கொல்லணும்னு அவசியம் இல்லேயே... மூக்கையும், வாயையும் ஒரு சேரப் பொத்திட்டாக் கூடப் போதுமே...

''என்ன மனசு இது...

''ஒருவனை எத்தனைக் கெத்தனை அந்தரங்கமாய் நேசிக்கிறோமோ — அத்தனைக்கத்தனை— விலக்கி வைத்து, சந்தேகப் படவும் செய்கிறதே...

''ராஜா அப்படிச் செய்ய மாட்டான்.

''இப்படியொரு மனசு சொன்னாலும், இன்னொரு மனசு — குரங்கு மனசு — இப்படியொரு குதர்க்க வாதத்தை எழுப்புகிறதே..

---

''உங்க கம்பெனி காலண்டரை ஜூன் மாதம் தான் வெளியிடுவீர்களா? ஏன்?''

''கம்பெனிச் செலவை ஐம்பது சதவிதம் குறைக்கும்படி மேலிட உத்தரவு. அதனால் பாதி வருடத்திற்குத்தான் காலண்டர் போடுவார்கள்!''

—ஏ. வி. தேவன்.



---

''ஏன் செய்ய மாட்டான்... இன்னும் எத்தனை நாள் தான் இது மாதிரி ஓடி ஒளிவான்... இத்தனைக்கும் காரணம் யார்? நான்தானே...

''எப்பொழுது என் வாயிலிருந்து இப்படியொரு வார்த்தை வந்து விட்டதோ — அவன், இது மாதிரி ஒரு முயற்சியில் இறங்க மாட்டான் என்பது என்ன நிச்சயம்?

''தன் மேல் பாய வந்த புலியையே அடித்துக் கொன்றவனுக்கு, குற்றுயிரும், கொலையுயிருமாய்க் கிடக்கும் எலியைக் கொல்வதா சிரமம்?'

''அவசரத்தில் அது மாதிரி ஏதாவது நடந்து விட்டால்...?''

தாரா நல்லவன்தான். ராஜாவின் மீது எத்தனையோ நன்றி உணர்வு கொண்டவள்தான். இருந்தாலும் தன் கணவன் என்று வரும்பொழுது...

மனசு பேதலித்து விடுகிறதே...

அன்று அரை நாள் லீவு எழுதிக் கொடுத்துவிட்டு, வீட்டைப் பார்க்கக் கிளம்பிவிட்டான்.

வீடு வரும் வரையில் மனக்கண் முன் —ராஜா, பாபுவைக் கொல்வது போன்ற காட்சிதான்...

உடல் வியர்க்க, கால் தளர... அவள் வீட்டுக் கதவின் பூட்டை ஓசையெழாமல் திறந்த போது...

ராஜா — பாபுவின் மூக்கில் பொருத்தப்பட்டிருந்த ரப்பர் குழாயில் கொஞ்சம் கொஞ்சமாகப் பாலை ஊற்றிக் கொண்டிருந்தான்...

கதவு திறக்கப்படும் ஓசை கேட்டு, திடுக்கிட்டு தலையை உயர்த்தியவன் — அந்த நேரத்தில் தாராவைப் பார்த்ததும் திடுக்கிட்டுப் போகிறான்...

''என்ன தாரா... அதுக்குள்ளே...''

என்ன சொல்வாள் அவள்...?

'உன் மேல் சந்தேகம்... அதனால் தான் ஓடி வந்தேன்' என்று எப்படிச் சொல்வாள்?

கொஞ்ச நேரம் எதுவும் பேசாமல், தலை குனிந்து நிற்கிறாள்.

''என்ன தாரா... உடம்பு சரியில்லையா?''

''உம்... ஒரே தலைவலி...''

''அடாடா... இரு... ஒரு நிமிஷத்துல காபி போட்டுக் கொண்டு வரேன்...''

அவன் உள்ளே ஓட, அவள் அவனையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

'சீ... எத்தனை அல்பத்தனமான மனசு எனக்கு...'

அன்று முழுக்க, ரகசியமாய் அழுது தீர்க்கிறாள் அவள்.

எத்தனை முறை இவன் மீது சந்தேகப் பட்டிருக்கிறாள் இவள்...

எத்தனை முறை — இவனைக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தி வைத்திருக்கிறாள் இவள்...

மறுநாள் காலையில், தெளிவான இதயத்துடன் அலுவலகத்துக்குச் செல்கிறாள்அவள்..

இனிமேல் — இது மாதிரியெல்லாம் மனதை அலைய விடக் கூடாது...

காலையில் ஆபீசுக்குள் நுழைந்ததும், எதிர்ப்பட்ட பியூனைப் பார்த்து, சின்னதாகச் சிரித்ததாகக் கூட ஞாபகம்...




கொசுவை விரட்டும் உறுதியாக—டார்டாய்ஸ்




ஹோமப்புகை போலே... மகிழ்ச்சியும்,
அமைதியும் தர—டார்டாய்ஸ்




கொசுக்களை விரட்டியடிக்க—டார்டாய்ஸ்




பாழும் கொசுக்களை விரட்டி அடிக்க எளிய
வழி—டார்டாய்ஸ்

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.



தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
போஸ்ட், பம்பாய்-400 023. போன்: 273831

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: ஷாந்திலால் பிரதர்ஸ்,
7, காசிச் செட்டி சந்து, 2வது மாடி, சென்னை-600 001 தொலைபேசி: 32886



## அருள்வாக்கு

மற்ற மதங்கள் இந்த லோகத்திலே இருக்கிற கண்ணுக்குத் தெரிகிற மனுஷ்ய மிருகாதிகளுக்குப் பிரீதி பண்ணுவதை மட்டுமே பரோபகாரமென்று சொல்கின்றனவென்றால் நம் மதம் தான் அதற்கும் மேலே போய் இந்த லோகத்தைச் சேராத லோகாந்தரங்களைச் சேர்ந்த INVISIBLE ஜீவன்களுக்கும் ப்ரீதியாக இப்படி வைதிக ஹோமத்திலிருந்து பூசாரியின் படையல் வரையில் அநேக வழிபாடுகளை வைத்துப் பரோபகார எல்லையை இன்னமும் விஸ்தாரம் பண்ணியிருக்கிறது என்றே எனக்குத் தோன்றுகிறது. பஞ்ச மகா யக்ஞங்களில் வரும் ஹோமம், பலி; மந்திர அத்யயனம், தர்ப்பணம் எல்லாமே பலவிதமான ஸ்ருஷ்டிகளுக்கும் உதவி பண்ணுவது தான்.

ஏகபரமாத்மாதான் இத்தனை வித ஜீவராசிகளாகவும் தேவதைகளாகவும் இவற்றைப் பூஜை பண்ணும் மனுஷ்யர்களாகவும் ஆகியிருப்பதை நம் மதம் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டுதானிருக்கிறது. இந்த நினைப்பு அடியோடு துண்டித்து விடக் கூடாதென்றுதான் எந்த தேவதையை வழிபட்டாலும் அதுவே ஸ்வாமி என்கிற மாதிரி ஸர்வ சக்தி, ஸச்சிதானந்த ஸ்வரூபம் என்றெல்லாம் சொல்வது அந்தத் தே வ தை க் கே 'தான் பரமாத்மா' என்பது தெரியாமலிருந்தாலும் கூட நாமும் அது பரமாத்மா என்பதை முழுக்க மறந்து போய் விடக் கூடாது என்பதே தாத்பரியம். அதாவது 'பல சாமி' இல்லை — ஒரே ஸ்வாமியைத்தான் ஒவ்வொரு ரூபத்துக்குள்ளும் அந்தர்யாமியாக நினைக்கிற பாவமே இது. எந்த தேவதையும் பரமாத்மாவின் ரூபமே என்றாலும், இதை மறக்காமல் நினைவூட்டிக்கொண்டாலும் அதை ஒரு தனி தேவதையென்றே அதற்குரிய வழிபாட்டால் தான் உபாஸிக்க வேண்டும் என்று நம் மதம் சொல்லுகிறது.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்

ஆனால்—

அத்தனை நிம்மதியையும், அடுத்த சில மணி நேரங்களில் வந்த செய்தி தகர்த்தெறிந்து விட்டதே...

விஜியைப் பற்றிய அந்தச் செய்தியைக் கொண்டு வந்தவள் ரமாமணிதான்.

விஜி...

அவளைத் தாரா ஒரேயொரு முறைதான் சந்தித்திருக்கிறாள்.

கபாலீச்வரர் கோவில் கிழக்கு கோபுர வீதியருகில்...

காரில் அமர்ந்திருந்த விஜியை, உமா எனத் தவறாக நினைத்து, தாரா ஏதோ சொல்லப் போனதும்... கதவைத் திறந்து கொண்டு இறங்கியவளைப் பார்த்து அவள் வியர்த்துப் போனதும்...

வார்த்தைகளே இல்லாத உளறலாக, விஜி ஏதோ சொல்ல முயன்றதும்...

அந்தப் பெண்ணின் சித்திர முகமும், துருதுருவென எதையோ தேடும் பாவனையில் அமைந்த விழிகளும்.... மடித்துக் கட்டிய இரட்டைப் பின்னலும், சற்றுப் பூசினாற் போன்ற கன்னக் கதுப்புகளும்....

அவளா... அந்த விஜியா...

'ஐயோ, இதை எப்படிப் போய் ராஜாகிட்டச் சொல்றது... அவராலே தாங்க முடியுமா...?'

அன்றைக்கும் அவள் அரை நாள் விடுப்பு எழுதிக் கொடுத்த போது— ரமாமணி அதிசயமாய் அவளைப் பார்க்கிறாள்...

''இன்னிக்குமா தலைவலி?''

''இல்லே... எங்க வீட்டுக்காரருக்கு ஒரு மருந்து அவசரமா வாங்கித் தரணும்... மறந்து போயிட்டேன். வாங்கித் தரணும்.''

''வீட்டுலேதான் அவரைக் கவனிக்கக் அவரோட பேரண்ட்ஸ் இருக்காங்கன்னு சொன்னியே...''

''இருக்காங்கதான். ஆனா, அவங்களுக்கு மெட்ராஸ்லே ஒரு இடமும் தெரியாது. மேலும் நான் இருக்கற இடத்துக்குப் பக்கத்திலே கடைகளே கிடையாது!''

தாரா படபடப்புடன் சொல்லிவிட்டு வீட்டுக்குக் கிளம்புகிறாள்.

வீட்டில்—

அவளைத் 'திடீரென'ப்பார்த்ததும் ராஜா— முதல் நாள் மாதிரியே தலைவலியோ என்று நினைத்தபடி எழுந்து போய்க் காபி போட, ஸ்டவ்வைப் பற்ற வைக்க...

''ராஜா!''

தாராவின் குரல் அழுகையில் நடுங்குகிறது...

''என்னம்மா?''

அவன், தன் இடத்தில் இருந்தபடியே திரும்பிப் பார்க்கிறான்.

''விஜி... விஜி போயிட்டா...''

''என்னது?''

''இன்னிக்குக் காலையிலே — விஜி ஹாஸ்பிடல்லே செத்துப் போயிட்டாளாம்...''

''உளறாதே...''

''இல்லே ராஜா... ரமாமணி சொன்னா''.

அவ்வளவுதான்...

தன்னை மறந்து, வாசலுக்கு ஓடுகிறான் ராஜா...

(தொடரும்)

# தேநீரும் விருந்தோம்பலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்

உங்கள் இல்லத்திற்கு வருகை தரும் நண்பருக்கு முதலில் வழங்குவது எது? நல்வரவு என்று சொல்லும் புன்னகையும் நல்லதொரு கோப்பை தேநீரும் தானே! அது வழி வழியாய் வரும் உங்களுடைய கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில் காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள் இருந்தால்? உடன் புதிய பால் கிட்டாத நிலையாகுமோ?

ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள் பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண உதவுகிறது. சிக்கனமாக, விரைவாக, எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்குகளுக்கும் இது ஈடு இணையற்றது.




ASP/SMP/5/84

# ஸாகர்
## ஸ்கிம் மில்க் பவுடர்

**கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான குணங்கள் உண்டே இதில்.**



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத்.

# புதிய உறவுகள்

நா. நாகராஜன்



வீட்டுக்குள் நுழைந்ததும் செருப்பை உதறி எறிந்து விட்டு ஹேண்ட் பேக்கைச் சோபாவில் சாய்த்து விட்டு, வேகமாகச் சமையலறையில், எட்டிப் பார்த்து, ''இன்னிக்கு என்ன டிபன்மா...'' என்று வழக்கம்போல் செல்லமாகக் கேட்கும் சித்ராவை அம்மா அன்று கொஞ்சம் வித்தியாசமாகப் பார்த்தாள்.

ஓர் ஏமாற்றம் அவள் முகத்தில் எழுதியிருந்தது.

''என்னம்மா மூட் அவுட்டா? ஏன் ஒரு மாதிரி இருக்கே...''

''ஒண்ணுமில்லேடி'' அம்மா சமாளிக்க முயன்றாள்.

பாத்ரூமில் போய் முகம் கழுவிக்கொண்டு தலையைக் கண்ணாடிமுன் நின்று லேசாக ஒதுக்கி விட்டு, ஒரு சின்னச் சிரிப்புடன் அம்மாவை நெருங்கி டிபனைப் பற்றிக்கேட்க நினைக்கையில் அம்மா அப்படியே இருந்தாள்.

''குட்மார்னிங்... எக்ஸ்சேன்ஜ் ஹியர். உங்களுக்கு யார் வேணும்...'' என்று கிண்டலாகக் கேட்டாள்.

அம்மாவின் முகத்தில் சிரிப்பு லேசாக எட்டிப் பார்த்தது.

''சாரி ஸார், ராங் நம்பர்!'' என்று சித்ரா சொன்னதும்,

''என்னடி இது! விளையாட்டா இருக்கே! உன்னோட எக்ஸ்சேஞ் வேலை ஆபிஸோட! வீட்டில் நீ பொண்ணு! நான் அம்மா!''

''அப்பா! இப்பவாவது நீ என்னைப் பொண்ணுன்னு ஒத்துண்டியே! சரி கடிதாசி ஏதாவது உண்டா...?''

அம்மா சட்டென்று மாறிப் போனாள்...

''டிராயர்ல இருக்கு! எடுத்துப் பாரேன்''.

''யாரு கிட்டேயிருந்து?''

''நீயே பார்த்துக்கோ...''

அவன் டிபனை முடித்து விட்டுக் காப்பிக் காகக் காத்திராமல் டிராயரை நோக்கி நடந்தான். ஒரு இன்லண்ட் கவர் மேஜையின் மேலேயே கிடந்தது. அனுப்புநர் முகவரியைப் படித்தான். போன வாரம் பெண் பார்த்து விட்டுப் போன ராமநாதனின் முகவரி இருந்தது. முகவரியைப் படித்ததும் கவரில் என்ன எழுதியிருக்கப் போகிருர்களோ என்று படபடப்பாக இருந்தது... என்ன வரிகளில்... என்ன வார்த்தைகளில்....

''பெண்ணைப் பிடிச்சிருக்கு...! மேற்கொண்டு ஒரு நல்லநாளில் நிச்சயம் பண்ணிக்கலாமா'' அல்லது, ''பையனின் அம்மாவுக்குப் பெண்ணைப்பிடிக்கவில்லே. எனவே...''

ஒரு நிமிஷம் அந்தக் கவரையே இப்படியும் அப்படியுமாகப் புரட்டிக் கொண்டிருந்தான்.

''பெண்ணைப் பிடிச்சிருக்கு. ஆனல் உங்க எஸ்டிமேட் ரொம்பக் குறைச்சலாக இருக்கிறதால எங்களால் சம்மதிக்க முடியவில்லே''

பையனின் சித்தப்பா எழுதியிருந்தார். பெண் பார்க்க வந்த அன்று நிறையப்பேசியது அவர்தான். அந்த அக்கறையில்தான் பதிலேக் கடிதமாகவாவது எழுதி இருக்கிருர்.

கடிதத்தைப் படித்து முடித்ததும் ரொம்பவும் வருத்தமாக இருந்தது. விவரிக்க முடியாத ஏமாற்றம் மனத்துள் விரிந்தது. தன் பக்கம் குற்றமில்லாத ஒரு தோல்வி!

பெண் அழகாக இல்லாவிட்டாலும், நல்ல குணம் உள்ளவளாக இல்லாவிட்டாலும் — பணம் சரிக்கட்டும் போல! என்ன ஒரு மட்டரகமான வியாபாரம்!

ஒரு வாரக் கனவுகள் சட்டென்று மண்ணில் கருகி விழுந்தன! இது ஒரு கசப்பான அனுபவம்!

இன்னும் எத்தனை தடவைகள் இந்தக் கோலத்தை அழித்து அழித்துப் போட வேண்டும்!

நினைக்க நினைக்க ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது. இந்தப் பதிலுக்கு ஏதாவது செய்தாக வேண்டும். தன்னைப் பெண் பார்க்க வந்த ராமநாதனையே போய்ப் பார்க்கத் தீர்மானித்தான்.

''எக்ஸ்க்யூஸ் மீ சார்! நான் ஒரு சேவிங்ஸ் அக்கவுண்ட் ஒபன் பண்ணணும்.''

கேட்ட குரலாக இருக்கிறதே என்று நிமிர்ந்தான்!

புன்னகைத்தபடி சித்ரா நின்று கொண்டிருந்தாள்.

ஓர் அப்ளிகேஷன் ஃபாரம் தந்து, ஸ்பெசிமென் சிக்நேச்சர் வாங்கி, எல்லா வேலேகளும் முடிந்த பின் பாஸ்புக் போட்டுக் கொடுத்தான்.

அவள் புறப்பட்டுப் போகும் வரை அவன் அவளைப் பார்த்துக் கொண்டிருப்பதை அவள் கவனித்துக் கொண்டாள்.

---

அவன்: ''எங்க ஆபீஸில் நிர்வாகம் ஸ்தம்பித்து விட்டது!''

இவன்: ''ஏன்? ஏதும் ஸ்ட்ரைக்கா?''

அவன்: ''ஊஹூம்! லேடி டைப்பிஸ்ட் ஒரு வாரம் லீவு போட்டுட்டா.. ஒரு பயலுக்கும் வேலே ஓடலே!...''

—உ. ராஜாஜி.



பிறகு மாதாமாதம் அவள் டிபாசிட் பண்ணும்பொழுது வலுவில் பேச்சுக் கொடுத்தான்.

கொஞ்ச நாட்களில் அவள் தயக்கம் விலகிப் போனது.

தியேட்டரில், பஸ் ஸ்டாப்பிங்கில், ஹோட்டலில் எதிர்ப்படும்போதெல்லாம் சிரித்தபடி நெருங்கி வந்து ஓரிரண்டு வார்த்தைகள் பேசுவாள்!

எக்ஸ்சேஞ்சில் பொழுது போகாத நேரங்களில் சித்ரா ஹெட்—செட்டை மாட்டிக் கொண்டு இவன் பேங்கிற்கு 'ரிங்' செய்து அரட்டையடிப்பாள்.

அன்று வேண்டுமென்றே கொஞ்ச நேரம் தாமதித்துக் கிளம்பிஞன். முகம் மாருமல் அவன் காத்திருந்தான்.

ஒரு பெண்ணின் சிநேகிதம் அத்தனை இலேசுப் பட்டதல்ல என்பது அவனுக்குப் புரிய வேண்டும்.

—''போனேஇராம் ரெண்டு வந்திருந்தது. அந்த வேலேயை முடித்து விட்டுக் கிளம்ப நேரமாகிவிட்டது!'' பொய்!

''இட்ஸ் ஆல்ரைட் சித்ரா! உனக்காகக் காத்துண்டு இருக்கிறதுல கூட சந்தோஷம் இருக்கு. எப்போ நீ எதிர்ப்படப்போறே! முதல்ல எப்படிப் பேச்சை ஆரம்பிக்கறே! என்ன டிரஸ்ல வந்திருக்கேன்னு கற்பனையோட காத்துண்டிருப்பேன்...''

அந்த வார்த்தைகள் அவளை நிஜமாகத் திருப்திப் படுத்தும். பாதிவழி பேசிக் கொண்டே போனதினல் அவளுக்கு அந்த விஷயம் மறந்து போய் விட்டது. சட்டென்று நினைவிற்கு வந்தவன் மாதிரி சொன்ஞன்:

''மறந்துட்டேனே... என்னை நாளைக்குப் பெண் பார்க்க வராங்க! ஸோ... நாளைக்கு நாம் மீட் பண்ண முடியாது...''

அவள் ஒரு நிமிஷம் பேச்சற்று நின்றுள்!

''சித்ரா! இதை நீ எங்கிட்ட சொல்லவே இல்லையே! உண்மையிலேயே இட் ஈஸ் எ ஷாக்கிங் ந்யூஸ் டு மீ. நான் வீட்டில 'கம்பெல்' பண்ணின இடங்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளிட்டேன் ஏதாவது ஒரு கார ணம் காட்டி...!''

—அவளுக்கு அவன் தவிப்பும் குழப்பமும் கொஞ்சம் வருத்தமும் வேடிக்கையுமாக இருந்தது!

''பெண் பார்க்க வரான்னு சொன்னதும் இப்படித் துடிக்கிறேளே! அவனுக்கு என் னைப் பிடிக்கலைன்னு?...''

''நீயா இப்படிப் பேசறேன்னு ஆச்சரி யமா இருக்கு சித்ரா. எவ்வளவு நம்பிக்கை நிறைந்தவள் நீ! உன்னுடைய காரியங்கள் எல்லாம் எவ்வளவு முன் யோசனையோட இருக்கும்! உனக்கே உன் எதிர்காலத்தைத் தீர்மானிச்சுக்கறதுல இவ்வளவு நிச்சயமற்ற நிலையா...''

''இல்லை ராம்! அதெல்லாம் தடுமாற் றங்கள்னு சொல்லிட முடியாது! என்னைப் பார்க்க வரவனுக்கு என் அழகு தெரியும்! படிப்பு கேட்டுத் தெரிஞ்சுப்பான்! வேலையும் சம்பளமும் தெரியும்! அவ்வளவுதான். என் மனசு தெரியாது. பணமோ, நகையோ கொறைச்சல்னு கிளம்பிடுவான்! என் புத்தி சாலித்தனத்தால இந்தத் தோல்வியைத் தடுத்து நிறுத்த முடியாது! இன்னும் உண் மையைச் சொல்லப் போனால் நீங்க பார்த்து விட்டுப் போன அன்னைக்கு நான் சந்தோ ஷத்தின் உச்சியில் இருந்தேன்! எல்லாமே என் ராசிப்படி, என் யோகப்படி, என் மனசின்படிதான் நடக்கும்னு ஒரு உறுதி! என் ஆசைகள் கண்டிப்பா நிறைவேறும்னு ஒரு நிச்சயம்! முதல் முயற்சியிலேயே வேலை கிடைச்ச மாதிரி இதுவும் முதல் தடவையி லேயே முடிஞ்சு போயிடும்னு திடமா இருந் தேன்! பட்...! ஒரு இன்லண்ட் கவர் என் அத்தனை அகங்காரத்தையும், தலைக் கனத்தையும், நம்பிக்கையையும் புரட்டிப் போட்டுடுத்து. என் இயலாமையை நினைச்சு நான் வருத்தப்படலே ராம்! என்னால எந்த நிலைமையிலேயும் சந்தோஷமாக இருக்க முடியும். ஆனால் மற்றவங்களோட தீர் மானம் என் விஷயத்தில் குறுக்கிடறபோது என் வழி மாறிப் போயிடறது. மத்தவங்க அடைஞ்சதை, அடைய ஆசைப்படறதை நான் விரும்பலேங்கறது யாருக்குப் புரியப் போறது?''

—அவள் பிரமிப்புடன் அவள் பேசியதைக் கேட்டுக் கொண்டிருந்தான். ''நிச்சயம் நீ ரொம்ப வித்தியாசமானவள் சித்ரா'' என் றான்.

''அதனாலதான் இவ்வளவு கஷ்டமும் ராம்'' என்று ஒரு சிரிப்புடன் அவன் வார்த்தையை ஏற்றுக் கொண்டாள்!

''வித்தியாசத்தை எல்லோரும் விரும்ப றது கிடையாது! அடங்கி இருக்கிறது சாதாரணம்! அது ஒரு படிப்பினை! வழக்கமா இருக்கிற வளர்ப்பு! அதை மீறிச் சந்திக்கிற போதுதான் எல்லாமே தலைகீழா தெரியறது...''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''இங்கிலாந்து நாட்டிலே எல்லோ ருமே ரொம்பப் படிச்சவங்களாமே அப்படியா?''

''ஆமாம்! அங்கெல்லாம் எழுதப் படிக்கத் தெரியாதவங்க கூட இங்கி லீஷ்லதான் பேசுவாங்கன்னு பார்த்துக் கோயேன்!'' —ஜூலியன்



மறுநாள் காலையில் பத்தரை மணிக்கு ராம் ஃபோன் பண்ணினான்.

''ஹலோ...''

''சித்ராவா...?''

''எஸ்...''

''நான் ராமநாதன் பேசறேன்...''

''மார்னிங்! என்ன விஷயம்...?''

''நேற்றைய சமாசாரம் என்னாச்சு...''

''என்ன காரணத்தாலோ நேற்று அவர்கள் வரவில்லை ராம்!''

பிறகு இரண்டொரு வார்த்தைகள் பேசி விட்டு போனை வைத்தான்.

அம்மாவிற்குச் சித்ரா – ராம் சிநேகிதம் எப்படித்தான் தெரிந்ததோ! அப்பா வீட்டில் இல்லாத போது மெதுவாகக் கேட்டாள்!

''நீ அந்தப் பேங்குப் பையனோட பழகற யாமே? உனக்கு ஏன் இப்படிப் புத்தி போறது? இத்தனை நாள் ஒழுங்கா இருந்த வள்தானே நீ...?''

அவளுக்கு அம்மாவின் பேச்சு வேடிக்கை யாக இருந்தது. பிறகு அவளும் கேலியாக.

''என்னம்மா இது! நீங்களாகப் பார்த்து விசாரித்து நல்லவன், கெட்டிக்காரன்னு ஏற்பாடு செய்த பையன்தானே? நான் என்னவோ சாதாரணமா பேசிப் பழகறதை யாரோ தப்பா நினைச்சுண்டு என்னவோ சொன்னான்னு நீயும் கேட்க வந்துட்டியே... என் மேல உனக்கு நம் பிக்கை இல்லையா...?''

அம்மாவுக்கு இவ்வளவு போதும்! தன் 'பழைய கால' புத்தியை நொந்துகொண்டு அடங்கிப் போவாள்!

வேண்டுமென்றே அம்மா கேட்டதைச் சாயங்காலம் ராமிடமும் அப்படியே சொன் னாள்!

அவனுக்கு என்ன பதில் சொல்ல என்று தெரியவில்லை.

''என்ன ராம்! நீங்களும் அம்மாகட்சியா! நிச்சயம் அப்படி இருக்க மாட்டீங்க?

# UNITS

## எங்களது மிக முக்கியமான அறிவிப்பு!



**ஜூலை மாதத்தின் விசேஷ சலுகை!**
**யூனிட்டுகள் வருடத்தின் மிகக் குறைந்த விலையான ரூ. 12.60க்கே கிடைக்கின்றன!**

ஜூலை மாதம் தான் யூனிட்டுகள் வாங்க வாய்ப்பான மாதம்! ஆம், ரூ. 12.60க்கே கிடைக்கும் மாதம் இதுதான்!

யூனிட்டுகளில் முதலீடு செய்தால் உங்களுக்கு கிடைக்கும் ஆதாயங்கள் பல. உங்கள் முதலீட்டிற்கு உத்தரவாதம். வேண்டும்போது சுலபமாக, பணமாக மாற்றக்கூடிய வசதி, தனி வரிச் சலுகைகள் மற்றும் வருடா வருடம் பெருகி வரும் வருமானம்!

யூனிட்டுகளில் முதலீடு செய்யுங்கள்! பதினைந்து லட்சத்திற்கும் மேலான நுட்பம் தெரிந்தவர்கள் யூனிட்டுகளில் முதலீடு செய்திருக்கிறார்கள்!

எங்கள் அலுவலகங்கள், வங்கிகள், பிரதான தபால் ஆபீஸ்கள் மற்றும் எங்கள் முக்கிய பிரதிநிதிகள் மற்றும் ஏஜெண்டுகள் மூலம் யூனிட்டுகளைப் பெறலாம்.



**யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா**

தலைமை அலுவலகம்: பம்பாய்-400020.
(ஒரு பொதுத்துறை நிறுவனம்)

பிராந்திய அலுவலகம்: ரெஜினல் மான்ஷன்,
46, செகண்ட் லைன் பீச், சென்னை-600001. போன்: 27433
கேரளா அலுவலகம்: 12/758, தெக்கேமடம் சாலை,
திருச்சூர்-680001. போன்: 24690

ஆந்திரப்பிரதேசு அலுவலகம்: 27-11-6B, மேரி சாலை,
கவர்னர்பேட், விஜயவாடா-520002. போன்: 63964



20 YEARS OF TRUSTED SERVICE

தமிழ்நாட்டிலுள்ள எங்கள் முக்கிய பிரதிநிதிகள் : திரு. எ. தனபால், 30, [illegible] ரோட், கோயம்புத்தூர்-641018. (போன் : 34776) மதுரை, ராமநாதபுரம் மாவட்டங்கள் : திரு. எம். ராமமூர்த்தி, 30, எல்.ஐ.ஸி. காலனி, மதுரை-625002. (போன் : ஆபீஸ் 30160, வீடு : 43179) தஞ்சாவூர் மாவட்டம் : திரு. கே. முத்துசாமி, 52-A, வ.உ.சி. நகர், தஞ்சாவூர்-613007, (போன் : 1224) சேலம் மாவட்டம் : திரு. என்.கே. இங்கர்சால், 155, ஸ்வர்ணாம்பிகை தெரு, அன்னதானப்பட்டி, சேலம் : 636002. (போன் : 64302) திருநெல்வேலி, கன்யாகுமரி மாவட்டங்கள் : திரு. எம்.எம். ராஜா, பக்கா பில்டிங் அன்னெக்ஸ், 41-B, திருவனந்தபுரம் நெடுஞ்சாலை, பாளையங்கோட்டை-627002. (போன் : 4520 (ஆபீஸ்) 5395 (வீடு) திருச்சி மாவட்டம் : திரு. எம். ராமலிங்கம், 21-A, கான்வென்ட் ரோடு, திருச்சிராப்பள்ளி-620001. (போன் : 28280)

Sista's-UTI.208.84 TM G

ஏன்னு நான் பழகறது உங்க கூட! தப்புன்னு சொன்னு நானேவேர்ந்து வரமாட்டேன்'' என்று சிரித்துக் கொண்டே சொன்னாள்.

''அம்மா... உன்னோட வாதத்திறமையை நான் ஒத்துக்கறேன்... நான் சரண்டர் ஆயிட்டேன். நீ எது சொன்னாலும் சரி.''

''என்ன ராம்! கல்யாணமானதும் எப்படி நடந்துக்கணும்ங்கறதுக்கு ஒத்திகையா?''

''இல்லே நீ ஒரு பெர்பெக்ட் வுமன். உன்னோட இத்தனை நாள் பழக்கமே எனக்கு நிறைய விஷயங்களைச் சொல்லிக் கொடுத்திருக்கு...''

''என்ன ராம்! ஒரேயடியாக் கிரீடம் வைக்கறீங்க! பயமா இருக்கு...''

''இல்லை, நிஜமாகவே சொல்றேன். யூஆர் க்ரேட்''

''க்ரேட்னவுடனே தான் ஞாபகம் வரது. என் ஃப்ரெண்ட் ஜூலியோட மேரேஜ் நெக்ஸ்ட் வீக் இருக்கு...'' என்றாள்.

''யார் அந்த ஜூலி? சட்டைக் காரியா...?''

''இந்தக் கிண்டல் எல்லாம் வேண்டாம்! என் பிரிய சிநேகிதி அவள்! அவ கல்யாணத்தைப் பத்தித் தெரிஞ்சுகண்டா நீங்க ஆச்சரியப்படுவீங்க...''

''இப்போக் கல்யாணம் நடக்கறது ஒண்ணும் ஆச்சரியமான இல்லே சித்ரா. ப்ளஸ்டு முடிக்கறதுக்குள்ளே போலீஸ் ஸ்டேஷன்ல நடந்து முடிஞ்சுடறது. சத்திரம் கிடைக்காதவங்க எல்லாம் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிடறாங்க...''

''ஜோக்கா! கடவுளே! முழு விவரமும் தெரிஞ்சா நீங்க ஆச்சரியப்படுவீங்க! ஜூலிக்குக் கண் தெரியாது.''

''சாரி சித்ரா...''

''ப்ளைண்ட், ஸ்கூல்ல படிச்சு முடிச்சுட்டு டெலிபோன் ஆபரேட்டரா சேர்ந்திருக்கா. கைநிறையச் சம்பளம்! தன்னோட ஸ்கூல்ல படிச்ச ஒருத்தனைக் கல்யாணம் செய்துக்கப் போறா! அவனும் ப்ளைண்ட்தான். சென்ட்ரல் கவர்ன்மெண்ட் வேலை! கல்யாணம் எப்படித் தெரியுமா? ரிஜிஸ்டர் மேரேஜ்! ரொம்ப சிம்பிளா. அவளுக்கு ஆரம்பத்தில 'இன்ஸ்ட்ரக்ஷன்' கொடுத்து ஜாப் ஸ்டடி பண்ண அஸிஸ்ட் பண்ணினது நான்தான்.''

சித்ராவின் குரலில் பெருமிதம் இருந்தது. இதைப் பேசும்போது ஜூலியைப் பற்றிய நினைவுகள் மனத்தில் மெள்ளத் தலைதூக்கின.

''அவள் கல்யாணத்துக்கு ஏதாவது ப்ரசண்டேஷன் செலக்ட் பண்ணணும்... உங்களுக்கு நேரம் இருக்குமா...''

''தாராளமா! உங்கூட கடைக்கு வர்றதுங்கறது எவ்வளவு சந்தோஷமான காரியம் தெரியுமா...?''

''அதிகமா ஐஸ் வைக்காதீங்க....''

கடைக்காரனிடம் கல்யாண ப்ரசண்டேஷனுக்கு என்றவுடன் வரிசையாக ஒரு ட்ரே, ஒரு நைட் லேம்ப், ஒரு குக்கர் என்று அடுக்கி வைத்தான்.

ராமநாதனைக் கேட்டாள்.

''உங்களுக்கு எதைப் பிடிச்சிருக்கு...?''

''உன்னை...''

# வட்டமேஜை

● தபால் இலாகா மற்றும் தொலைபேசி இலாகா அதிகாரிகளிடத்தும், தொழிற்சங்க தலைவர்களிடத்தும் கருத்துக்களைக் கேட்டு வெளியிட்டிருந்தால் 'இல்லாத வசதியும், இமயச் சுமையும்' கட்டுரை முழுமையாய் இருந்திருக்கும்.
திருச்சி–1, மா. வேல்முருகன்.

● இங்கிரிட் பெர்க்மனின் 'என் கதை' சுருக்கம் முழுமையான வரலாறைத் தேடிப் படிக்கும் ஆவலைத் தூண்டி விட்டது. மொழி பெயர்த்த அசோகமித்திரனுக்கு நன்றி.
ஸ்ரீரங்கம், ஆர். ஸ்ரீநிவாசன்.

● ''கலையைக் கலை என மதித்திடும் ஒரு ஓவியக் கலைஞரின் மனநிலையையும் தற்கால மனிதர்களின் கீழ்த்தரமான ரசனையையும் பிரதிபலிப்பதாக அமைந்திருந்தது ''பாதை ஓரத்து ஓவியங்கள்'' சிறுகதை.
ஊரூர் வெளிக்கடை, டி. ராஜன்.

● தங்கள் தலையங்கம் கண்டேன். புதிதாக புத்தகம் வாங்கிப் படிக்க வசதியில்லாத

# பொது அறிவை

ஆனால் மனத்தி... மலையளவு படிப்பார்வ முள்ள எண்ணற்ற வாசகப் பெருமக்களும் பாதிக்கப்பட்டுள்ளார்கள். பல வருடங்களாக நூலகங்களில் புதியதாக புத்தகங்களைவாங்க வில்லை. நூலக வரியை மட்டும் கட்டும் வாசகர்கள் அதன் பயனை அனுபவிக்கவே முடியவில்லை.
திருத்தணிகை, சுப. முருகேசன்.

● ''எதிர்காலம் உங்கள் கையில்'' பகுதியில், பி.டி.எஸ்., என்ற பல் மருத்துவப் படிப்பு சென்னை பல் மருத்துவக் கல்லூரியில் மட்டுமே உள்ளது என்று வெளியாகி உள்ளது. ஆனால், சிதம்பரத்தில், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பி. டி. எஸ்., படிப்பு, பேராசிரியர் திரு. சீனுவாசனை முதல்வராகக் கொண்டு மிகச் சிறப்பாக நடந்து வருகிறது.
திருப்பூர், —லட்சுமி நடராஜன்.

● அரசினர் தோட்டம் பற்றிய ஆய்வுக் கட்டுரையைப் படித்தேன். எங்கள் ஊரில்





பல பள்ளிக் கூடங்கள் இரவு நேர விபச்சார விடுதிகளாகவும், சூதாட்ட கிளப்களாகவும், சமூக விரோதிகளின் இரவு நேரத் தங்குமிடமாகவும் இருந்து வருகின்றன. பல உயர் அதிகாரிகளுக்குப் பல முறை புகார் செய்தும் இது வரை பலன் இல்லை.

சிதம்பரம், சீதா ரவி.

● ''சில விளம்பரங்கள் சில விஷமங்கள்'' ''அறுவை ஒரு கப்'' ''இன்னும் சில அறிவிப்புக்கள்'' மூன்றையும் ஒன்றாகக் கொடுத்து எங்கள் வயிற்றைப் பதம் பார்த்து விட்டீர்கள் போங்கள்.

சின்னசேலம்–1, எம். ஏ. பாஷா.

# விரட்டுகிறார்கள்

● பல ஆண்டுகளுக்கு முன் நான் படித்த பள்ளிக்கூடத்தில் ''இறை வணக்கத்''தைத் தொடர்ந்து சில மாணவர்கள் அன்றைய முக்கிய செய்திகளை வாசிப்பார்கள். ஆனால் இப்போது இம்மாதிரி வழக்கம் இருப்பதாகத் தெரியவில்லை. அனைத்துப் பள்ளிக்கூடங்களிலும் 5 அல்லது 10 நிமிடங்கள் இந்தச் ''செய்திகள் வாசிக்கும் பழக்கத்திற்கு'' ஏற்பாடு செய்தால் மிகவும் பயனுள்ளதாக இருக்கும். பொது அறிவும் வளரும்.

காரைக்குடி, வி. எஸ். அனந்தராமன்.

● எஸ். எஸ். எல். சி. தேர்வு எழுதிவிட்டு விடுமுறைக்கு வட ஆற்காடு மாவட்டத்திலுள்ள வேலூருக்குச் சென்றேன். அங்குள்ள 'தந்தை பெரியார் மைய நூலக'த்திற்குச் சென்று செய்தித்தாள் படிக்க எண்ணினேன். அங்குள்ள அதிகாரி, ''தம்பி! செய்தித்தாள் படிப்பதற்கு உனக்கு இன்னும் வயதாகவில்லை; பெரியவர்கள் தான் படிக்க வேண்டும்'' என்று கூறி என்னை அனுப்பி விட்டார். பொது அறிவை வளர்த்துக் கொள்வதற்காகச் செய்தித்தாள் படிக்கச் சென்ற இடத்தில் இத்தகைய வரவேற்பு! சம்பந்தப்பட்டவர்கள் கவனிப்பார்களா?

கோவை, நா. இரவிசங்கர்.

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)

''ம்...''

''ஐ மீன்! உன்னைக் கவர்ந்த ஒன்று நிச்சயம் எனக்கும் பிடிக்கும்...''

கடைசியில் இரண்டு யானைகள் சங்கிலி கட்டி ஒரு மரத்துண்டை இழுக்கும், மர சிற்பத்தைப் பேசி முடித்து வாங்கினார்கள்.

''இதுக்கு என்ன அர்த்தம் இருக்கு ராம்?''

''என்ன...?''

''வாழ்க்கைங்கறது ரெண்டு பேர் நடத்திச் செல்கிற படகு! இருவர் இழுக்கவேண்டிய பாரம்! இந்தச் சங்கிலிதான் அந்தப்பந்தம்! கல்யாணங்கிற உறவு...!''

''ஒரு சின்னப் பிரசன்டேஷனுக்குப்பின்னால இவ்வளவு சிந்தனையா...?''

''சும்மா கதை! முனகல பட்டதைச் சொன்னேன்.''

''உனக்கு எல்லாம் அழகாகவே தோணறது...''

''அதுவும் நல்லதுக்குத் தான்'' என்றான்.

ஒருநாள், லீவு போட்டுவிட்டு ஜூலியுடன் ஊருக்குப் போகப் போகிறேன் என்ற போதுதான் ராமுக்கும் அந்த 'ஐடியா' வந்தது!

''நானுங்கூட லீவு போட்டுட்டு உங்கூட வரலாமா...?''

''வித் ப்ளஷர்...''

''உன் ஃப்ரண்ட் தப்பா நெனைச்சுக்க மாட்டாளே!''

''ப்ளீஸ் கொஞ்சம் தாராளமா இருங்க! இந்த மாதிரி சிந்தனையெல்லாம் நமக்குத் தான்! ஜூலி எப்படிப்பட்ட பெண் தெரியுமா!... ஃப்ரெண்ட்ஷிப்புக்கு அர்த்தம் என்னன்னு கேட்டா அவளைச் சொல்லலாம்! 'நான்'னு சொன்னா அவளுக்கு உயிர். எனக்கு வேண்டியவங்கன்னு சொன்னப்புறம் அவ உங்களை ட்ரீட் பண்ணறதைப்பாருங்க. அப்புறம் எங்க சிநேகிதத்தோட ஆழம் புரியும்...''

''ஏ அப்பா! அவ்வளவு நம்பிக்கையா அவள் மேலே!''

''ஆமாம் ராம்! உங்களுக்கு என் குணமும் மனமும் தான் தெரியும்! நானுங்கூட ஜூலி கிட்டே இருந்து நிறையக் கத்துண்டேன். முகம் ஏமாத்தும். கண்கள் பொய் சொல்லும்! அதையும் தாண்டி ஆழமாப் பதியறது பேச்சும், செய்கையும் தான். அவங்க எவ்வளவு சரியாய்ப் புரிஞ்சுக்கறாங்க தெரியுமா...?''

''எனக்கு இப்போ அதெல்லாம் வேண்டாம்! பையன்கிட்டே நான் ஒண்ணே ஒண்ணு கேட்டுத் தெரிஞ்சுக்கணும்...''

''என்னது?'' ஆச்சரியத்துடன் கேட்டாள்.

''அவன் தன் காதலை அவளுக்கு எப்போ, எப்படி, எந்த வார்த்தைகளில் முதல்ல சொன்னான், தெரியப்படுத்தினான் கறதைத் தெரிஞ்சுக்கணும்.''

''கவலையே வேண்டாம்! அந்த ப்ரபோசலை முதலில் ஆரம்பிச்சதே அந்தப் பொண்ணு தான்'' என்றாள் சித்ரா.

''அப்போ நீ போய்க் கேள்'' என்றான் ராம்!

இருவரும் சிரித்தனர்!

# மூலக் கனல்

## அத்தியாயம் 13

தேர்தல் வேலைகளில் திருமலை முழுமூச்சாக இறங்கினான். சின்னக் கிருஷ்ணராஜனைப் பற்றி அரசியல் ரீதியாக மட்டுமே எதிர்க்காமல் உள்பட்டணத்தோடு சம்பந்தப்படுத்திப் பழைய பூர்வோத்தரங்களை எல்லாம் சொல்லிக் கொச்சையாக எதிர்த்தான் திருமலை. அதற்கு நேர்மாறாகச் சின்னக் கிருஷ்ணன் தன்னை எதிர்க்கும் தனி நபர்கள், பெயர்களைக் குறிப்பிடாமல் தன்னால் மக்களுக்கு என்னென்ன நன்மைகளைச் செய்ய முடியும் என்று மட்டும் பிரச்சாரம் செய்தார். சின்னக் கிருஷ்ணனின் இந்தப்பண்பு பலரால் பாராட்டப்பட்டது. பெரும்பாலோரால் வரவேற்கப்பட்டது. திருமலை சண்பகத்தைத் தள்ளிவைத்திருப்பது, சொந்த மகளைப் படிக்க வைக்கக் கூடப் பண உதவி செய்யாமல் தன் சுகத்துக்காகப் பல பெண்களுடன் தொடர்பு கொண்டிருப்பது ஆகிய விவகாரங்களைப் பற்றி எதிர்த் தரப்பினர் பதிலுக்குப் பேச ஆரம்பிப்பார்களே என்று யாரும் யோசிக்கவே இல்லை. ஒரே ஒருவர் யோசித்து அதுபற்றி அவனை எச்சரித்தார்.

''தம்பி! உங்க பூர்வோத்தரமும் மத்ததும் இந்த ஊர்லே எல்லோருக்கும் நல்லாத் தெரியும். அதனாலே கோவில் குளம் பக்தி இதுகளிலே தீவிர நம்பிக்கையுள்ள மேல் தட்டு மக்களில் யாருடைய ஓட்டும் உங்களுக்குக் கிடைக்காது. அவங்களுக்கு உங்க மேலே நம்பிக்கை வர்ற மாதிரி நீங்க உடனே எதினாச்சும் பண்ணியாகணும்.''

''எதினாச்சும் பண்ணியாகணும்னு நான் திடீர்னு அனுமாருக்கு வடைமாலைப் போடவோ, பெருமாளுக்குத் திருக்கல்யாண உற்சவம் நடத்தி வைக்கவோ முடியாது. அதுக்கு ஒருநாளும் என் மனச்சாட்சி சம்மதிக்காது. வேணும்னா ஒரு காரியம் பண்ணலாம்! நம்ம வேணுகோபால சர்மா முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலே உள்ளூரிலே தமிழாசிரியரா இருந்து ஓய்வுபெற்றவர். முக்கால்வாசி வாக்காளர்கள் அவருடைய மாணவர்களாக இருந்திருப்பார்கள். அவர் பக்தி, கோவில், குளம், சம்பிரதாயம் பழைய பழக்கவழக்கங்கள் எல்லாத்திலேயும் நம்பிக்கை உள்ளவர்தான். அவருக்கு ஒரு மணிவிழா நடத்தி தடபுடல் பண்ணி அதன் மூலமாக மேல்தட்டு ஓட்டுக்களை நம்ம சைடிலே திருப்ப முடியுமான்னு பார்க்கணும்.''—

நா. பார்த்தசாரதி

''மணிவிழான்னு போட முடியாது. அவருக்கு ஏற்கெனவே அறுபது முடிஞ்சு போச்சுங்க...''

''மணி விழாவுக்கும், அறுபதுக்கும் சம்பந்தம் இருந்தாகணும்னு ஒண்ணும் கட்டாயமில்லை. எப்ப யாருக்கு, மணிகுடுக்கிறோமோ அதுதான் மணிவிழா! இப்ப சர்மாவுக்கு மணிவிழா!! போஸ்டரிலும் அழைப்பிதழிலும், எல்லாத்திலியும் 'வித்தகர் வேணுகோபாலனார் மணிவிழா'ன்னு பிரிண்ட் பண்ணுங்க. சர்மான்னு பேரு வேணாம். 'தலைவர் திரு. நடத்தும் வித்தகர் வேணுகோபாலனார் மணிவிழா'ன்னு போஸ்டர் போடுங்க. வேணுகோபாலனார் படத்தையும் எம்படத்தையும் அந்த ஆளுயரப் போஸ்டர்லே அச்சுப் போட்டு, உள் பட்டண வெளிப்பட்டண அக்ரஹாரங்கள், சந்நிதித் தெருக்கள் எல்லாத்திலியும் நிறைய ஒட்டுங்க...''

''நல்ல ஐடியா! செஞ்சிடலாம்'' மணிவிழா ஏற்பாடாயிற்று. மணிவிழாவில் வேணுகோபாலனாருக்குப் பொன்னாடை போர்த்தி மலர்க் கிரீடம் சூட்டித் திரு பேசினான்:

''மாற்றான் தோட்டத்திலே மலர்ந்த தாயினும் ஏற்றதொரு நறுமலரை அதன் மணத்தை மதிப்பவர்கள் நாங்கள். ஏறக்குறைய முப்பதாண்டுக் காலத்திற்கும் மேலாக இங்கே தமிழ்த் தொண்டாற்றிய இந்தப் பெரியவரை காங்கிரஸார் ஏன் கவனிக்கவில்லை? உள்பட்டணத்துப் பணமூட்டைகள் இந்த ஏழைத் தமிழ்த் தொண்டருக்கு ஏன் உதவ முன் வரவில்லை? இவர் மந்தி நீசர் இந்தி மொழியைப் பரப்பப் பாடுபட்டிருந்தால் தொந்திகள் குலுங்க உள்பட்டணத்துப் பெருந்தனக்காரர்கள் இவருக்கு உதவிட ஓடோடி வந்திருப்பார்கள். இவர் பாடுபட்டதோ ஏழைத் தமிழுக்காக. தமிழுக்குப்பாடுபட்டவர்கள் நாதியற்றுப் போகலாகாது என்ற அக்கறை எங்கள் இயக்கத்துக்கு மட்டுமே உண்டென்பதை நாடறியும். வீடறியும். நானிலம் முழுவதுமே அறியும். நான் சொல்லித்தான் நீங்கள் அறிய வேண்டும் என்பதில்லை''—என்பதாக முழக்கித் தள்ளினான் திருமலை.



உன்னூர் மக்களில் பெரும்பாலோர் அநுமார்மேல் அசையாத நம்பிக்கையும் பயபக்தியும் உள்ளவர்கள். பெரும்பாலான பாமர மக்களிடம் அந்த எழிலிருப்புத் தேரடி அநுமார் படத்தை நீட்டி வலது கையில் சத்தியம் வாங்கிக் கிருஷ்ணராஜனுக்கே ஓட்டுப் போடுமாறு காதும் காதும் வைத்தாற்போல் ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள் ஜமீன்தாருக்காக வேலை செய்தவர்கள். தேர்தல் நாள் நெருங்க நெருங்கப் பரபரப்பு அதிகமாகிக் கொண்டிருந்தது. பரம்பரைப் பெரிய மனிதனை மதிக்கவேண்டும் என்ற தழும்பேறிய மனப்பான்மை ஊரில் அதிகமாக இருந்தது. உன்பட்டணம் அரச குடும்பத்தைக் கேரக்டர் அஸாஸினேஷன் செய்வது போல் திருமலையும், அவன் தரப்பினரும் பேசிய பேச்சுக்கள் சுவரில் எழுதிய கன்னாபின்னா எழுத்துக்களெல்லாமே நேர் எதிரான பலன்களை அளித்தன. அந்த எழுத்துக்களைப் பார்த்தபின், பேச்சுக்களைக் கேட்டபின் மக்களுக்கு உன்பட்டண அரச குடும்பத்தினர் மேல் மரியாதை அதிகமாயிற்றே ஒழியக் குறையவில்லை. எழிலிருப்பு போன்ற பழமையான ஜமீன் நகரங்களில் ''நெகடிவ் அப்ரோச்'' எடுபடவில்லை. சினிமாவில் சம்பாதித்த பணத்தைத் தண்ணீராய் ஓடவிட்டுச் செலவழித்தும், முழுமூச்சாக எதிர்ப்புப் பிரச்சாரத்தில் இறங்கியும் ஜெயித்து விடலாம் என்று திருமலையால் முழுமையாக நம்ப முடியவில்லை.

தேர்தலுக்குப் பத்துப் பதினைந்து நாள் இருக்கும்போது, இருந்தும் பயனில்லை செத்தும் பயனில்லை என்பது போல் சண்பகம் அவனுக்கு மகத்தான கெட்ட பெயரை உண்டாக்கி விட்டுப் போய்ச் சேர்ந்தான். நந்தவனத்து மனோரஞ்சிதப் புதரடியில் பாம்பு கடித்து இறந்து போன சண்பகத்துக்கு சிறுவன் ராஜா தலையை மொட்டை



அடுத்துக் கொண்டு கொள்ளிச் சட்டி ஏந்தி அந்திமக் கிரியைகள் செய்தான். திருமலைக்கு யாரும் வந்து தகவலே சொல்லவில்லை. தன்னுடைய தேர்தல் அலுவலக மாடியிலிருந்து ஒரு பாடையைப் பின்பற்றி யாரோ ஒரு சில உறவினர்களும் முன்னே ஒரு சிறுவன் மொட்டையடித்துக் கொண்டு கூடாமல் இருக்க உறி போல் கட்டிக் கொள்ளிச் சட்டியைப் பிடித்துப் போவதையும் கூடத் திருமலை வேபார்த்தான்.

போவது தன் மூத்தமனைவி சண்பகத்தின் பிணம்தானென்பதையோ, கொள்ளி ஏந்திச் செல்வது தன் மகன் தான் என்பதையோ அவனால் அனுமானிக்க முடியவில்லை. மாலையில் தான் விவரம் அவனுக்குத் தெரிந்தது. நந்தவனத்துக்கு ஓடினான். சண்பகத்தின் தம்பியோ, மகன் ராஜாவோ அவனிடம் முகம்கொடுத்துப் பேசவே இல்லை.

''எலெக்ஷனுக்குத்தானே வந்திருக்கீங்க. எலெக்ஷன் வேலையைப் போய்க் கவனியுங்க'' — என்று வேறு எகத்தாளமாகப் பேசி விட்டான் சண்பகத்தின் தம்பி. வைக்கோற்போரில் தீப்பற்றுவது போல், 'உள்ளூரிலேயே இருந்துக்கிட்டுச் சொந்த சம்சாரத்தோட சாவுக்குக் கூட எட்டிப் பார்க்காத கல்நெஞ்சக்காரன் ஐயா அந்தத் திருமலை' — என்று இச்செய்தி எங்கும் நெருப்பாகப் பரவிவிட்டது. அவன் கல்நெஞ்சக்காரன், ஈவு, இரக்கமில்லாத படுபாதகன் என்பது போல் அவனுக்கு எதிராகப் பரவியவற்றை அந்தச் சமயத்தில் மேடை போட்டு மறுத்துப் பேசவும் முடியவில்லை. உண்மையிலேயே அவன் சண்பகத்தின் சாவுக்குப் போக முடியாமல், வரைநிலைத் தன் அநுதாபத்தைக் காட்ட முடியாமல் விதி சதி செய்து விட்டது. விதியில் அவனுக்கு நம்பிக்கை கிடையாது. என்றாலும் அப்போது நம்பாமலிருக்கவும் முடியவில்லை. இம்மாதிரி அபக்கியாதிகள் எழிலிருப்பைப் போன்ற நேரங்களில் ஏற்படும் போது அவற்றைச் சுலபத்தில் பிரசாரம் செய்து மறுத்தோ, மேடை போட்டுப் பேசியோ மாற்றிவிட முடியாதென்று அவனுக்கு நன்றாகப் புரிந்தது. இவ்வளவுக்கும் உண்மைத்தனமைத்தார் தரப்பில் யாரும் இந்தச் சம்பவத்தை எடுத்துச் சொல்லிப் பேசவோ, பிரசாரம் செய்யவோ முடியவில்லை. கிருஷ்ணராஜனே அதைத் தடுத்து விட்டாராம். ஆனால் பிரசாரமே செய்ய அவசியமில்லாமல் அது பரவியது. கணிசமாக அவன் பெயரைக் கெடுத்தது. சண்பகத்தின் எதிர்பாராத திடீர் மரணத்

---

# ஞானபீடம்

**நா. காமராசன்**

● சமுதாய வாழ்க்கை என்பது மனிதனால் கண்டுபிடிக்கப்பட்டதல்ல; மாறாக — அது அவனுடைய இயல்பான, உள்ளார்ந்த தேவையின் நேரடியான விளைவாகும். மனிதர்கள் எங்கெங்கு — எந்தெந்தக் காலம் வரை இருக்கிறார்களோ — அங்கெல்லாம் சமுதாயம் என்பது இருக்கவே செய்யும். சமுதாயத் தொடர்பில்லா தனிமை மரணத்திற்குச் சமமாகும்.

● மனிதனின் இயற்கை நிலையே சமுதாய வாழ்க்கைதான். தற்காப்பு உணர்வோடு இணைந்திருக்கும் சமுதாய உணர்வுதான் இயற்கையின் மிகச் சக்தி வாய்ந்த உணர்வாகும். நமது ஒழுங்கு முறைகளுக்கேற்ப— அந்த இயற்கையினிடமிருந்து பெறப்படும் தனி மனிதர்களின் சிரமைப்பான சமுதாயம் ஓர் இயற்கை விளைவேயாகும்.

● தனி வளர்ச்சி, இலட்சிய வேட்கை இரண்டிற்கும் சமுதாயம் ஆதாரமாகிறது. எந்த இலட்சியத்தை அடைவதற்குரிய வழிமுறையும் அதனால் உருவாக்கப்படுகிறது. இந்த உருவாக்கம், தன்னுணர்வு, சுயதிர்ணயம் ஆகியவற்றின் உச்சத்தைத் தொடுகிறது. உண்மையைத் தேடும் உழைப்பும் சுதந்திரமும் கைகோத்து நடைபோடுகின்றன.

● தன்னுணர்வு உள்ளவன் என்ற நிலையில் தனது வாழ்வையும், செயல்பாடுகளையும், பிறர் நினைவில் நிறுத்த முடியும். எண்ணமும், செயலும் பயனுள்ள விளைவுகளைத் தருமாறு செய்ய முடியும். வெளிப்பொருள்களின் மீது தனது ஆளுமையைப் பதித்து — தனது நோக்கங்களுக்கு ஏற்ப அவைகளைச் சீரமைத்துக் கொள்ள முடியும். சமுதாய அமைப்பால் — தனி மனிதன் தனது எல்லைக் கோடுகளைத் தாண்டி வந்து சிறப்படைகிறான். அந்தச் சிறப்பு, பிறர் மனத்திலும் — வருங்காலத் தலைமுறையின் மீதும் பதிவு செய்யப்படுகிறது. பிறர் மீது அவனுடைய சிந்தனைகள் பாதிப்பு ஏற்படுத்துவதால் — அவை சகாப்தத்தின் சொத்தாக மாறி விடுகின்றன.

● சிதைந்த — கோணல் மாணலான முதிர்ச்சியற்ற கருத்துக்களைச் சமுதாய ஓட்டம் பக்குவப்படுத்தி தலைமுறை தலைமுறையாகத் தொடரும் ஒரு பிரும்மாண்டமான ஞான பீடத்தை உருவாக்குகிறது.



---

துக்கும் தேர்தலுக்கும் சம்பந்தமே இல்லை என்றாலும் தேர்தலின் போக்கையே பாதித்துத் திசை திருப்பி மாற்றி விட்டது அது. அவளுடைய சாவு அவனுடைய வெற்றி நம்பிக்கையையும் சேர்த்துக் கொன்று விட்டது.

இவ்வளவுக்கும் கிருஷ்ணராஜன் மிகவும் பண்போடு தன் தேர்தல் அலைச்சல்களுக்கு நடுவில் எங்கேயோ ஓர் ஐந்து நிமிஷம் திருமலையைத் தனியே சந்தித்துச் சண்பகத்தின் மரணத்துக்காக முறைப்படி துக்கமும் விசாரித்து விட்டார்.

தேர்தல் நாளுக்கு முன்னமேயே திருமலையின் தரப்பில் வேலை செய்தவர்களிடம் ஒரு சோர்வு வந்துவிட்டது. சோர்வும், அவநம்பிக்கையும் அவர்களைத் தளர்த்திவிட்டன.

தேர்தல் முடிந்தது. வாக்குகள் எண்ணப்பட்டன. முதலில் இருந்த நிலைமையைப் பார்த்தால் திருமலைக்கு டெபாஸிட் பிழைக்குமா என்றே சந்தேகமாக இருந்தது. ஆனால் பின்னால் சில தொகுதிகளில் அவனுக்குக் கிடைத்த ஓட்டுக்கள் நிலைமையைச் சரிப்படுத்த உதவின. பத்தாயிரத்து எழுநூற்றெண்பது ஓட்டுக்கள் அதிகம் பெற்று உன்பட்டணம் கிருஷ்ணராஜன் வெற்றி பெற்று விட்டார். திருமலைக்கு டெபாஸிட் போகாமல் பிழைத்து மானத்தைக் காப்பாற்றியது. தேர்தல் முடிவு டெக்ளரேஷனில் கையெழுத்துப் போடும் போது "ஒரு மரியாதைக்கு அவரை கங்கிராஜுலேட் பண்ணிட்டு வாங்க" – என்று தன் உதவியாளன் கன்னையா தன்னிடம் சொன்னதைத் திருமலை காதில் வாங்கிக் கொள்ளவே இல்லை. எவ்வளவோ பெரும் புகழும், பணமும் வந்தும் திருமலையிடம் 'கல்ச்சர்' என்ற அம்சம் பூஜ்யமாகவே இருப்பதைப் பார்த்து உதவியாளன் கன்னையா உள்ளூற வருத்தப்பட்டான். பணவசதி, படாடோபம், ஜமீன், ஆட்சியுரிமை, எல்லாம் பறிபோன பின்பும் உன் பட்டணத்து அரச வம்சத்தினரிடம் ஒட்டிக் கொண்டிருந்த பண்பாடும் பெருந்தன்மையும் மட்டும் குன்றாமல் குறையாமல் அப்படியே இருந்தன. அதைக் கண்டும் அவர்கள் மேலே பொறாமைப்படுவதைத் தவிரத் திருமலையால் வேறெதுவும் செய்ய முடியவில்லை. அவனது இயக்கம் முதன் முதலாகத் தேர்தலில் இறங்கி எப்படியோ மாநிலம் முழுவதுமாகச்சேர்த்து ஒரு பத்துப் பதினைந்து இடங்களில் சட்டசபை உறுப்பினர் பதவியைக் கைப்பற்றியிருந்தது. எதிர்பார்த்ததை விட இது குறைவு என்றாலும் அரசியலில் பதவியைப் பிடிக்கும் முயற்சிக்கு ஆரம்பம் கிடைத்து விட்டதற்காக அவர்கள் மகிழ்ந்தார்கள்.

(தொடரும்)



# கோகுலம் வெகுமதி திட்டம்

உங்களுக்குப் பிடித்தமான ஏதேனும் ஒரு பள்ளிக்குக் கோகுலம் உங்களுடைய அன்பளிப்பாகக் கிடைக்கச் சந்தா அனுப்புமாறு கோரியிருந்தோம். குழந்தைக் குலத்தைக் குதூகலிக்கச் செய்யப் பின்வருவோர் முன்வந்துள்ளனர்.

ஏ. காமராஜ்,
3 7, சேஷாசல கிராமணி,
தோட்டம் தெரு,
சாத்தன்காடு, சென்னை–19.

பி. கதிரேசன்,
வி 5/39, மோகன் நகர்
ஸ்டீல்பிளாண்ட் டவுன்ஷிப்,
சேலம்–636 030.

திரு. கதிரேசன்,
ஐந்திணைப் பதிப்பகம்,
15, சைடோஜி தெரு, சென்னை–5.

அயோத்திநாயுடு–ராஜம்மாள்
தெற்கு 4–ம் வீதி,
புதுக்கோட்டை–1.

டாக்டர் எஸ். வேங்கடராமன்,
59/19, நவஸஹ்யாத்ரி சொஸைட்டி,
பூனா–411 029.

திரு. நடாத்தூர் நம்பி,
சின்னையாபுரம்,
பாண்டிச்சேரி.

எஸ். வி. சிட்டிபாபு,
துணைவேந்தர் அண்ணாமலை பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்–608 002.

ராஜலக்ஷ்மி சுப்பிரமணியன்,
2, சென்குப்தா தெரு, ராம் நகர்,
கோயமுத்தூர்–641 009.

பி. துளசிதாஸ் சித்ரகலா,
22, ராமானுஜம் தெரு,
சென்னை–17.

சாயிமாதா சிவபிருந்தாதேவி,
மஞ்சவாடி,
புதுக்கோட்டை.

எம். ஏ. எம். பழனியப்பச் செட்டியார்,
புதுமனை இரண்டாவது தெரு,
ராயவரம்–622506, புதுக்கோட்டை ஜில்லா.

(ஒவ்வொரு பள்ளிக்கும் 4 வருட சந்தா)

அருணாசலேசுவரர் வித்யா சாலா,
கே. முதலிப்பட்டி போஸ்டு,
(வழி) சிவகாசி–626 172.

சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்,

காட்டாங்குளத்தூர்–603 203,
செங்கல்பட்டு ஜில்லா.

பரங்கிமலை பஞ்சாயத்து யூனியன் ஆரம்பப் பள்ளி,
மெயின்ரோடு, மேடவாக்கம் சென்னை–73.

ஸ்ரீ குலபதி பாலையா நடுத்தரப்பள்ளி,
நெல்லூமண்டித் தெரு,
புதுக்கோட்டை–1.

ஆலந்தூர் நகராட்சி துவக்கப் பள்ளி,
நங்கநல்லூர்,
சென்னை–61.
ஆலந்தூர் நகராட்சி துவக்கப் பள்ளி,
பழவந்தாங்கல், சென்னை–61.

மீனாட்சி நர்சரி பள்ளி,
எம். கே. அம்மன் கோவில் தெரு,
சென்னை–4.

குமராட்சி ஊராட்சி ஒன்றிய துவக்கப்பள்ளி
மன் ரோடு,
அண்ணாமலைநகர்–608 002.

ராணி மெய்யம்மை ஆச்சி பாலர் பள்ளி,
அண்ணாமலைநகர்–608 002.

ரங்கநாதபுரம் பெண்கள் ஹையர் செகன்டரி பள்ளி,
விவேகானந்தா ரோடு, ராம்நகர்,
கோயமுத்தூர்–641 009.

விவேகானந்தா வித்யாலயா,
11–வது தெரு, டி.என்.எச்.எஸ்.காலனி,
கொரட்டூர், சென்னை–600 080.

டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி பெண்கள் அனாதைப் பள்ளி,
(மகளிர் இல்லம்) மஞ்சவாடி,
புதுக்கோட்டை

ஸ்ரீ சரஸ்வதி ஹைஸ்கூல்,
கோனாப்பட்டு–622 503.
ஸ்ரீ சரஸ்வதி ஆரம்பப் பாடசாலை,
கோனாப்பட்டு–622 503
புதுக்கோட்டை மாவட்டம்

# சட்டத்தை திருத்துங்கள்

32

எண்டமூரி விரேந்திரநாத்தின் 'தூக்கு தண்டனை' சட்டத்தைத் திருத்துங்களாக அவதரித்திருக்கிறது.

பாதி கதை இந்நேரம் படிக்கிறவர்களுக்குத் தெரிந்திருக்கும். இருந்தாலும் இரண்டு வார்த்தைகள் கதையைப் பற்றி:

தூக்குதண்டனையை இந்த நாட்டில் இருந்து அகற்றி விட வேண்டும். இதுதான் கதாநாயகனின் லட்சியம். எதனுல்? சின்ன வயதில் அப்பாவியான அவன் அப்பாவைச் சட்டம் தூக்கில் போட்டதால்.

லட்சியம் எல்லாம் சரி. அப்புறம் அதை உடைக்க மேற்கொள்ளும் வழிகள் தான் விளக்கெண்ணெய், வெண்டைக்காய், வாழைப் பழத்தோல் பிஸினஸாக இருக்கிறது.

மோகன் ஹீரோ என்று சொல்வதற்குப் பதில் கோமாளி என்று சொல்லி விடலாம் போல. முதல் ஸீனில் வாதாடுகிற விதமும் சரி, ஸீனியர் லாயரிடம் தூக்கு தண்டனையை ரத்து செய்ய அவர் போட்ட திட்டத்தை விளக்குகிற விதமும் சரி— இராமநாராயணனு, மோகனு — யார் காரணம்?

நளினி — நாயகி. வழக்கம் போல் வருகிருர். வழக்கம் போல் மேலாடையை நழுவ விட்டு ஹூக் மாட்டுகிருர். 'தண்ணியடித்த' மோகனை எதிர்பாராமல் சந்திக்கிருர், காதலிக்கிருர், ஊடுகிருர், சேருகிருர் —இன்னும்என்ன?

மூலக்கதை எப்படியோ?

திரைக்கதையின் சிலகதாபாத்திரங்கள் நம்மைக் குழப்புகிற விதம் இருக்கிறதே! அந்த விரிந்த கண் ராமையா யார்? குத்தப் பட்டவை யார் கண்கள்? ரஜனிக்கும் மோகனுக்கும் எப்படி சினேகிதம்! இது போன்ற இன்னும் பல கேள்விகள்.

ஏராளமான கிரஷ் பாட்டில்கள் இடையே நடைபெறும் அந்தச் சண்டையின் மூவ்மெண்ட்ஸ் பழகு தான் என்றுலும் சிகவேஷன் புதுசு என்பதாலேயே ஒரு கவர்ச்சி இருக்கிறது. யமகாதகப் பேர்வழி அந்த ஸீனியர் ஜெய். எவ்வளவு அடக்கமாய் இருந்தார் ஆரம்பத்தில்.

அப்புறம் — அந்த சத்யராஜின் அகண்ட, தூண், தூண்களாலான, மௌனமான, இருட்டான இருப்பிடம். மெதுமெதுவாய்த் திகிலை ஊசி வழியாய் உள்ளே ஏற்றத் தவறவில்லை.

தூக்குத் தண்டனைக்கைதியிடம் விஷயத்தைக்கேட்டுத் தெரிந்துகொண்டு வெங்காய சாம்பார் ஸ்பெஷல் மகேந்திரன் படும்பாடு — படத்தில் கால் மணி நேரம் வந்தாலும் கூட முழுப்படத்தையும் ஆக்ரமித்த ஒரு உணர்வு ஏற்படுகிறதே — அதற்காகவே வெல்டன் மகேந்திரன். டைரக்ஷன் ராமநாராயணன் என்பதாலேயே இரண்டொரு இடங்களில் வசனங்கள் வேறுநிறத்தில்இருக்கும் என்ற எதிர்பார்ப்பு இருந்தது. டைரக்டர் ஏமாற்றவில்லை.

கங்கை அமரன் இசை. என். கே. விசுவநாதன்ஒளிப்பதிவு — என்று லிஸ்டில் சேர்த்துக் குறிப்பிடும் அளவுக்கு இருக்கிறது அவர்கள் பணி.

மூலக்கதை படு ஸீரியஸ் என்று கேள்வி.

—ஜெயமன்மதன்



ஏன் உங்க மூஞ்சியில இவ்வளவு அசடு வழியுது?

அங்க மட்டும் என்ன வாழ்க்கதாம்? இந்தப் படத்தில யார் தான் அசடு வழியலையாம் — மகேந்திரனைத் தவிர!

# இளைப்புக் களையும் இளையாற்றங்குடி

ஆனந்தி

**கோ**தாவரி நதி தீரத்தில் சுபத்திரர் என்ற அந்தணர் வாழ்ந்துவந்தார். அவருக்கு ஒன்பது குமாரர்கள். இந்த ஒன்பது பேருக்கும் முக்தியில் நாட்டம் உண்டாயிற்று. தங்கள் தந்தையிடம் இந்த எண்ணத்தைத் தெரிவித்த போது சுபத்திரர் வியப்பும், மகிழ்ச்சியும் அடைந்தார். எல்லோருமாகச் சேர்ந்து தலயாத்திரை செய்வதென்றும் முக்திக்கு வழி புலப்படுகிறதா என்று தேடுவதென்றும் முடிவு செய்தார்கள். தென்னாடெங்கிலும் யாத்திரை செய்தார்கள். காவிரிக்கரையில் உள்ள தலங்களையெல்லாம் தரிசித்த பிறகு திருக்கோகர்ணம் என்ற சிவத் தலத்தையடைந்தார்கள். அலைந்து அலைந்து களைத்துச் சோர்ந்திருந்த போது "இளைசைப் பதி என்ற தலத்துக்குச் செல்லுங்கள். அங்கே உள்ள சிவ தீர்த்தத்தில் நீராடி எம்மைப் பூஜிப்பீராக" என்று அசரீரி கேட்டது.

சுபத்திரரும் அவருடைய பிள்ளைகளும் உடனே புறப்பட்டுப் பாண்டி நாட்டில் இளையாற்றங்குடியைத் தேடிச் சென்றார்கள். நீர் இல்லாத வனத்தில் தேடியலைந்து சோர்ந்து தளர்வுற்ற போது எதிரே சிவதீர்த்தம் தென்பட்டது. அந்தக் குளத்தில் இறங்கி நீராடியதும் அவர்களுக்கு இளைப்பு நீங்கிப் புத்துணர்வு உண்டாயிற்று.

அப்போது கைலாசநாதரே சித்தர் உருவில் வந்து அவர்களுக்கு உபதேசம் செய்தார். ஈசனே தடுத்தாட்கொண்டு உபதேசம் செய்த பின் சந்தேகமோ, மனத்தளர்ச்சியோ இருக்குமா என்ன? சரீர இளைப்பும், மன இளைப்பும் தீர்க்கும் அரிய தலமாதலால் இளையாற்றங்குடியாகவே இன்றும் விளங்குகிறது.

சுபத்திரருடைய குமாரர்கள் இங்கே தவம் புரிந்து நவ சித்தர்களாகிப் பல அருஞ்செயல்களைச் செய்தார்கள். சுபத்திரர் கேட்ட வரத்தின்படி இந்தத் தலத்துக்குச் சித்தவனம் என்றும், ஈசனுக்கு சித்தபதி என்றும் பெயர் வழங்கலாயிற்று.

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த இளையாற்றங்குடி இராமநாதபுரம் மாவட்டத்தில் காரைக்குடியிலிருந்து சுமார் பன்னிரண்டு கிலோமீட்டர் தொலைவில் இருக்கிறது. காரைக்குடி பேருந்து நிலையத்திலிருந்து சுலபமாகப் போய் வரலாம். வழியில் பிள்ளையார்பட்டியில் விநாயகப் பெருமானையும் தரிசனம் செய்யலாம்.

ஆஸ்திக அன்பர்களுக்கு இளையாற்றங்குடி புதிதாக இருக்க முடியாது. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தில் 65—ஆவது அதிபதியாக விளங்கிய, ஜகத்குருஸ்ரீமகாதேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் அதிஷ்டானம் இங்கே இருக்கிறது. நமது பரமாச்சாரியாளுடைய மனத்துக்கு உகந்த தலம் இது. கோயிலை அடுத்த தேவஸ்தான விடுதியில் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் பரமாச்சாரியாளுடன் தங்கி இருந்தார். இங்கேதான் பாடம் கேட்டார். இந்த



○ சுக்கிரவார அம்மன்



○ சோமாஸ்கந்தர், பிரியாவிடை அம்மன் ஸ்கந்தர்?



○ சுப்பிரமணியர்



○ முத்துமாரியம்மன்

விவரங்களையெல்லாம் இளையாற்றங்குடியைச் சேர்ந்த பெரியவர்கள் பெருமிதத்தோடு நினைவில் வைத்திருக்கிறார்கள்.

பேருந்திலிருந்து இறங்கும் போதே கைலாச நாதர் கோவில் கோபுரம் எதிரில் கம்பீரமாகத் தெரிகிறது. ஊருக்கே சுனையாக விளங்குகிறது பெரியகுளம். படித்துறைகள் கட்டப்பட்டு நன்றாகப் பராமரிக்கப்படுகின்றன.

இந்தக் கோவில் சுமார் எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்டதென்றும், சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன்பு நாட்டுக் கோட்டை நகரத்தார் இந்தப் பகுதியில் வந்து குடியேறிய போது பாண்டிய மன்னர் அவர்களுக்கு இந்தக் கோவிலை வழிபாடு தெய்வமாக வழங்கியதாகவும் கூறுகிறார்கள். நகரத்தாரின் ஒன்பது கோவில்களில் இது மிகவும் முக்கியமானது. கைலாச நாத சுவாமியைக் குல தெய்வமாக உடைய ஏழு நகரத்தார் பிரிவினர் இருக்கிறார்கள். அவர்களுடைய வீட்டுத் திருமணங்களில் கோவிலிலிருந்து வரும் நிர்மால்ய மாலையை அணிந்த பிறகே திருமாங்கல்ய தாரணம் செய்வது வழக்கமாக இருந்து வருகிறது.

பிள்ளையார் சந்நிதியில் நிற்கும் போதெல்லாம் குட்டிக் கொண்டு தோப்புக் கரணம் போடுகிறவர்கள் இந்த ஊரில் திண்டாடிப் போவார்கள். ஏழு நகரத்தார் பிரிவினரும் விநாயகப் பெருமானை வழிபட தனித் தனியே சந்நிதி அமைத்திருக்கிறார்கள். மேலும் அனுக்ஞை விநாயகர், உற்சவர் எல்லாரும் இருக்கிறார்கள். போதாக் குறைக்கு கோபுர வாசலில் ஒரு விநாயகர். நந்தி மண்டபத்தின் நிலைக்கு இருபுறமும் கணநாயகர் கம்பீரமாக வீற்றிருக்கிறார். அங்கேயே ஸ்ரீ மங்களேச்வரி ஸமேத அரசமங்கலசுவாமி எழுந்தருளி இருக்கிறார். கோவிலின் விசேஷங்களையும் ஊரின் பெருமையையும், எடுத்துக் கூறிய திரு. கண்ணப்ப குருக்களிடம் இந்தப் பெருமானைப் பற்றிக் கேட்கிறோம். இந்தக் கோவிலுக்கு மான்யமாக விடப்பட்ட நிலபுலங்கள் தஞ்சை மாவட்டத்தில் நீடாமங்கலத்தில் உள்ளன. ஆகவே அந்த ஊர் சுவாமியை இங்கே பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள் என்று கூறினார். இரு தரப்பிலும் எவ்வளவு பரந்த மனப்பான்மை!

சுவாமி சந்நிதிக்கு முன்னே வரும் போது தூண்களில் நகரத்தார் பெருமக்களுக்கு பஞ்சாக்ஷர உபதேசம் செய்து வந்த க்ளாமடம் சுவாமிகளின் சிலையும், திருப்பணிகள் செய்த கல்லாப்பேட்டை ஜமீன்தார் சிலையும் இருப்பதைப் பார்க்கிறோம்.

ஸ்ரீ தண்டி, ஸ்ரீ முண்டி என்ற துவார பாலகர்களைக் கடந்து அர்த்த மண்டபத்தை அடைந்து கைலாச நாதரைத் தரிசிக்கிறோம். சுயம்பு மூர்த்தியாக அலங்காரங்கள் ஏதுமின்றி மெல்லிய தாரையின் தண்மையில் நனைத்துக் கொண்டு காட்சி தருகிறார் ஈசன். பாவம்! கைலாய மலையிலிருந்து இராமநாதபுரம் மாவட்டத்திற்கு வந்திருக்கிறார். கத்தரி வெய்யில் தாங்குமா அவருக்கு? தாரை அவசியம் தான்.

பிரதக்ஷிணம் செய்யும் போது அனுக்ஞை விநாயகர் ஸோமாஸ்கந்த மூர்த்தி, முருகப்பெருமான், லக்ஷ்மி தேவி, துர்க்கை முதலிய பரிவார தேவதைகளைத் தரிசிக்கிறோம்.

அர்த்த மண்டபத்தில் உற்சவ மூர்த்திகள் அலங்காரமாகக் காட்சி தருகிறார்கள். நடராஜப் பெருமானும், சக்கிர வார அம்மனும், முருகப் பெருமானும் மற்ற மூர்த்திகளும் பளபளவென்று நேற்று செய்த மூர்த்திகளைப் போல மின்னுகிறார்கள். திருவாசிகள் கூட புத்தம் புதியது போல் விளங்குகின்றன. மற்ற

தேவதைகளோடு கிரணிப் பட்டி முத்துமாரியம்மனும் வீற்றிருக்கிறாள்.

மாலை நேர பூஜை தொடங்கி விட்டது. மணிகளின் ஓசையும் வாத்ய கோஷமும் நிசப்தமாக இருந்த கோவிலைத் திடீரென்று நாதத்தால் நிரம்பி வழியச் செய்கின்றன. அலங்கார தீப ஆரத்தியைப் பார்க்க ஆவலோடு நிற்கிறோம். திரை விலகுகிறது. ''சம்போ! மகாதேவா! கைலாஸநாதா! ஹாலாஸ்ய ப்ரபுவே!'' என்றெல்லாம் உள் மனம் கூவ கன்னத்தில் போட்டுக் கொள்கிறோம். சற்று முன் பார்த்த தாரை இல்லை. இப்போது கைலாஸ நாதர் சந்த்ர சூர்யாக்னி நேத்திரங்களுடன் விபூதிப்பட்டையும், வெள்ளியால் செய்த வில்வ மாலையும் தரித்துக்கொண்டு அலங்காரமாகக் காட்சிதருகிறார். அடுத்து நடராஜப் பெருமானுக்கு தீபாராதனை.

இந்த ஊர் பைரவர் மிகவும் சக்தி வாய்ந்தவர். எண்ணிய எண்ணியாங்கு எய்தும்படி செய்யவல்லவர். சூரனின் படைகளைத் தொலைத்துத் தேவர்களைக் காத்த பெருமான். தெற்கு நோக்கிய சந்நிதி.

ஸகல உயிர்களுக்கும் தாயாக விளங்கும் தேவியின் திருமுன்பு நிற்கிறோம். இருபுறமும் வீரசக்தி விஜய சக்தி நிற்கிறார்கள். தீபாராதனை செய்யும் போது ஆர்வத்துடன் திருமுக மண்டலத்தைப் பார்க்கிறோம். அடாடா! வெள்ளிக் கவசம் பூண்டு, கரத்தில் தாமரை மலர் ஏந்தி — அதன் மீது என்ன கிளியா — அசப்பில் மதுரை மீனாட்சி போலவே சாயல். அதே களை. ஒயிலாக நிற்கும் அழகு.

''ஓம் மாதங்க்யை நம:, ஓம் விஜயாயை நம: ஓம் ச்யாமாயை நம:'' என்று அஷ்டோத்திரம் காதில் விழுகிறது. ''இங்கே ஸியாமளா பீடம். ஸியாமளா அஷ்டோத்திரம் சொல்வது தான் வழக்கம்'' என்று கூறுகிறார் ஸ்ரீ கண்ணப்ப குருக்கள்.

நித்தியகல்யாணிமங்களச் செல்வியான தேவியைத் தரிசித்த மன நிறைவோடு குங்குமப் பிரசாதம் பெற்றுக் கொள்கிறோம்.

இளையாற்றங்குடிபெரியவர்கள் என்று போற்றப் படும் ஸ்ரீ மகாதேவேந்த்ர ஸரஸ்வதி பாதாள் அவர்களுடைய அதிஷ்டானம். ''பெரியவாள் இந்த ஊரில் இருந்த போது இங்கேயே இருப்பா. அவருடைய பாதுகைகளை இங்கே விட்டுட்டுப் போய்ட்டா. இங்கே இருக்கு'' என்று கூறினார் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி கிரௌதிகள். கற்பூர தீபாராதனை செய்து விபூதிப் பிரஸாதம் தந்தார்.

''ஸ்ரீ ஷண்முக ஜனக சந்த்ர மௌளீச்வரா'' என்ற மைசூர் ஸதாசிவ ராவின் பாடல் ஞாபகம் வருகிறது. பரமாச்சார்யாளின் மனத்துக்கு உகந்த பாடல் இது.

''பாஷண்ட மத கண்டன
ஷண்மத ஸ்தாபன
ஸ்ரீமந் மகா தேவேந்த்ர
ஸரஸ்வதி''

என்று சங்கராபரணத்தில் பாடிக் கொண்டே வலம் வரும் போது பிராகாரத்தின் பிறையில் வைக்கப்பட்டிருக்கும் பாதுகைகளைத் தரிசிக்கிறோம். பெரியவாளையே தரிசனம் செய்தது போன்ற உள்ள நிறைவு ஏற்படுகிறது.

இருட்டி விடப்போகிறதே என்று அவசரமாக பட்டினச் சாமி நகரத்தார் கோவிலை அடைகிறோம். சுவாமி ஆத்ம நாதர். அம்பாள் சௌந்தர நாயகி. உள்ளே சென்று தரிசனம் செய்கிறோம்.

இங்கேயும் ஒரு பெரிய ஊருணி இருக்கிறது. கோவிலும் குளமும் அந்தி வானமும், நட்சத்திர மண்டலங்களும் பார்க்கப் பார்க்க அழகாக இருக்கின்றன. சிறிது கூடக் களைப்புத் தெரியவில்லை. சோர்வு இல்லை. இளையாற்றங்குடி அல்லவா?

அடுத்ததாகக் கழனி வாசல் குடியார் பிரிவைச் சார்ந்த நகரத்தார்களின் வழிபடு தெய்வமான பெருமாள் கோவிலுக்குச் செல்கிறோம். மிக நன்றாகப் பரிபாலிக்கப்பட்டு வரும் ஆலயம் என்பது பார்த்த உடனே தெரிகிறது. பட்டர் தீபாராதனை செய்து வழங்கிய திருத்துழாயையும் தீர்த்தத்தையும் அருந்தியதும் உற்சாகமே உண்டாகி விடுகிறது.

ஊருணி எதிரில் கிழக்குப் பார்த்து ஒக்கூர் விநாயகர் கோவில் இருக்கிறது. பிள்ளையார் சதுர்த்தியன்று யாக சாலை அமைத்து 108 கும்பம் வைத்து, பிரும்மச் சாரி பூஜையுடன் மிக விசேஷமாக உற்சவம் நடத்துவார்களாம்.

காசி க்ஷேத்திரத்தில் சிவ பூஜை செய்து கொண்டிருந்த மகரிஷிகள் எல்லோரும் அகஸ்திய முனிவரை வணங்கி, ''உலகத்தில் சுயம்புவாகத் தோன்றிய லிங்கங்களில் சிறந்தது எது?'' என்று கேட்டார்கள்.

''ஞானமும், யாகமும், தானமும் என்ன பலனைக் கொடுக்குமோ அதைவிட அதிகமான பலனைக்கொடுப்பது சிவபூஜை. இளையாற்றங்குடி என்ற பாண்டி நாட்டுத் தலத்தில் சிவபூஜை செய்பவர்கள் மேலான பதவிகளை அடைவார்கள்'' என்று கூறினார் அகஸ்தியர்.

'அகஸ்தியரே சொல்லி விட்டார், நிச்சயம் நமக்கு மேலான பதவிகள் காத்திருக்கின்றன' என்ற திருப்தியோடு ஊர் திரும்புகிறோம்!

---

சென்ற 82, 83வருடங்களில், குறைந்த காலத்தில் அதிகத் தூரம் சுற்றுப்பிரயாணம் (உலக அளவில்) செய்தவர் பாரதப் பிரதமர் இந்திரா காந்திதான். அடுத்த இடத்தை வகிப்பவர் இங்கிலாந்துப் பிரதமர் மார்க்கரெட் தாட்சர்.

—ஜா. ரவி.





# மஞ்சமத்தி

பாரதீய ஞானபீடப் பரிசு ரூபாய் ஒன்றரை லட்சம் இந்த ஆண்டு மாஸ்தி வெங்கடேச ஐயங்காருக்குக் கிடைத்திருக்கிறது. வியப்பில்லை. இத்தனை ஆண்டுகாலம் கிடைக்காததுதான் ஆச்சரியம். இந்திய இலக்கிய உலகில் எத்தனை வகை பரிசுகளும் பாராட்டுக்களும் பதவிகளும் உண்டோ அத்தனையும் இந்த மூத்த (வயது தொண்ணூற்றிரண்டு) எழுத்தாளரைத் தேடி வந்துள்ளன. விடுதலைக்கு முன்பே இந்திய எழுத்தாளர் மகாநாட்டுத் தலைவராக இருந்தார். பி. இ. என். என்னும் சர்வதேச எழுத்தாளர் அமைப்பின் இந்தியப் பிரிவுக்குத் தலைமை, சாகித்திய அகாதமிப் பரிசு, அதன் கௌரவ 'ஃபெல்லோ' விருது, கன்னட சாகித்திய பரிஷத் தலைமைப் பதவி என்று வரிசையாகப் பட்டியல் நீளும். 'ஸ்ரீநிவாஸ' என்ற பெயரில் எழுதி வரும் மாஸ்தி, பெரும்பாலும் சிறுகதை எழுதினார். எழுதிய நாவல்கள் மூன்றே. சுப்பண்ணா, சென்ன பஸவ நாயகன், சிக்கவீர ராஜேந்திரன் என்னும் மூன்றுமே தமிழிலும் வெளிவந்துள்ளன. இந்த சிக்கவீர ராஜேந்திரன் நாவலுக்காகத்தான் பாரதீய ஞானபீடப் பரிசு கிடைத்துள்ளது.

சிறுகதை எழுத்தாளர் மாஸ்தி, கன்னட எழுத்தாளர் பலருக்கும் ஆசான். பாரதப் பண்பின் உயர்வுகளை மையமாக வைத்து எழுதும் இவரது கதைகள் மொழி எல்லையைக் கடந்த இந்திய இலக்கியம். ராஜாஜியால் விரும்பிப் படிக்கப்பட்ட எழுத்தாளருள் ஒருவர் மாஸ்தி.

இளமையில் வறுமையைக் கண்டவர்: அந்த நாள் ஐ. சி. எஸ். பதவி போன்ற ராஜாங்க நிர்வாக பதவியைக் கொள்கை காரணமாகத் துறந்தவர். மனிதாபிமானம் மிக்க கதைகள் பல தந்த மாஸ்தி, நல்ல நாடகாசிரியரும் கூட. தாகூரையும், ஷேக்ஸ்பியரையும் ரசிக்கத் தெரிந்தவர். ஏன், வாழ்க்கையை நன்கு ரசிக்கத் தெரிந்த முழு வாழ்க்கை வாழ்ந்த முதுபெரும் எழுத்தாளர்.

(சாகித்திய அகாதமி வெளியீடான 'கன்னடச் சிறுகதைகள்' என்ற நூலில் 'ஸ்ரீநிவாஸ' வின் 'மஞ்சமத்தி' முதல் கதை. தி. நா. தி சிதாதேவி மொழிபெயர்ப்பு.)

இது கோர்ட்னே துரையினுடைய டயரியின் மற்றொரு பகுதி.

''ஸ்ரீராமன் ராவணனைக் கொன்று விபீஷணனுக்குப் பட்டம் கட்டுவதற்காக லங்கைக்குள் நுழையும் போது நகர் வாயிலில் ஒரு நீலக்கல்லைக் கண்டு மனத்தைப் பறிகொடுத்தார். இங்கேயே ஆசைக்கு வசப்பட்டு விட்டால் இன்னும் உள்ளே இருக்கும் வைபவங்களைக் கண்டு என்ன என்னவெல்லாம் ஆசைகள் தலையெடுக்குமோ என்று சந்தேகித்துத் திரும்பி வந்து விட்டாராம். லட்சுமணன் தான் நகருக்குள் சென்று விபீஷணனுக்குப் பட்டம் கட்டினாராம். இந்துக்களிடையில் இப்படி ரஸமான கதை ஒன்று உண்டு.

''இந்த நாடு நமக்கு லங்கைபோல் ஆகி விட்டது. நாம் ராமனைப் போல் இல்லை. 'எல்லாவற்றையும் துறந்து என்னைத் தொடர்ந்து வா' என்று பணம் சொல்லியதேபோல் காதில் விழுந்த கீழ்நாட்டு அழைப்பு, மேல்நாட்டினருக்கு எட்டியது. நம்மவர் இந்நாட்டுக்கு வரத் தொடங்கியது முதல் இந்நாட்டுச் செல்வம் சிறிது சிறிதாக நம் நாட்டுக்குப் போய்க் கொண்டிருக்கிறது. நாம் அழகான எந்தப் பொருளைக் கண்டாலும் தூக்கிப் போகவேண்டும் என்கிறோம். ஷாஜஹானின் மயிலாசனம் நாதிர்ஷாவுடன் பெர்ஷியாவுக்குப்போயிற்று. நாதிர்ஷா போனவன் திரும்பி வரவில்லை. நாம் இங்கேயே நிலைத்து விட்ட பல நூறு நாதிர்ஷாக்களைப் போல் ஒவ்வொருவர் ஒவ்வொன்று வீதம் ஓசைப்படாமல் கடத்திக் கொண்டிருக்கிறோம். ராஜ்யத்தில் முன் இருந்த பிரசித்தியான — நல்லதான — சிறந்த பொருள்கள் போய்க் கொண்டே இருக்கின்றன. நாடு காலியாகிக் கொண்டே வருகிறது.

''நான் இவ்விஷயத்தைப்பற்றி யோசிக்கும்படியாகச் சமீபத்தில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. சில நாட்களுக்கு முன்னால் என் தங்கை எமிலியும் அவளுடைய கணவனும் என் வீட்டுக்கு வந்தார்கள். ஜான் கீபர்க்கூவர் (தங்கையின் கணவன்) இந்த நாட்டின் மேல் மிகவும் பிரியம் கொண்டவன்; எனக்குத் தெரிந்த மட்டில் நம் ஜனங்களுள் வேறு யாருக்கும் இவ்வளவு விசுவாசம் இல்லை. அவன் இந்நாட்டு மக்களைப் புரிந்து கொண்டவன்; இவர்களது நடையுடை பாவனைகளை அறிந்தவன்; இவ்விடத்து நாகரீகத்தில் சிறந்த அம்சங்கள் எவை என்பதை அறிவான்; இவ்விடத்துக் கோயிற் சிற்பங்களின் திறனை அறிவான். இந்தச் சீமையில் முன் காலத்தில் அழிவற்ற ஒரு பண்பாடு இருந்ததென்றும் இப்பொழுது நம் கண்ணில் படும் தினசரி வாழ்க்கையில் அந்தப் பண்பாட்டின் சிறந்த அம்சங்கள் காணப்படுகின்றன என்றும் நம்மவர்களுக்கு உணர்த்துவதற்காக எத்தகைய அரும்பெரும்முயற்சி எடுத்துக் கொண்டான் என்பதை அவன் பெயரைச் சொன்னவுடன் எல்லோரும் புரிந்து கொள்வார்கள். அதற்காக அவன் இந்த நாடு முழுவதுமே சுற்றியிருக்கிறான். எங்கெங்கே கோயில்கள் உள்ளனவோ, எங்கெங்கே மடங்கள் இருக்கின்றனவோ எங்கெங்கே அரண்மனைகளும் அதைச் சார்ந்த

ராஜ குடும்பத்தினரும் இருக்கிறார்களோ அங்கெல்லாம் சென்று அங்கே இருக்கும் சிற்ப, சித்திர வேலைப்பாடுகளையும் படங்களையும் பார்வையிட்டிருக்கிறான். பார்த்து அவற்றை வருணித்து இந்நாட்டுச் செய்திகளை எல்லோரும் அறிய எடுத்துச் சொல்லிப் புகழ்ந்திருக்கிறான். அதற்காக இந்நாட்டு மக்கள் அவனுக்குப் பெரிதும் நன்றி செலுத்த வேண்டும். அவனுடைய இந்த முயற்சிக்கெல்லாம் எமிலி துணையாக நின்று இந்தியச் சிமை என்றாலே உண்மையான ஒரு நம்பிக்கை கொண்டிருக்கிறாள்.

''ஸ்பார்க்கூவர் அங்கங்கே முடிந்த வரையில் சிற்பங்கள், படங்கள் முதலியவற்றை இலவசமாகவோ, விலைக்கோ வாங்கிச் சேர்த்திருக்கிறான். எல்லாவற்றையும் ஓரிடத்தில் சேர்த்துச் சொந்தமாக மியூஸியம் ஒன்றை நிறுவ வேண்டும் என்பது அவன் விருப்பம். இங்கே வரும்போது அவர்கள் அஜந்தாக் குகைகளைப் பார்த்துவிட்டு வந்திருக்கிறார்கள்.



அவர்களுடைய உற்சாகத்தைச் சொல்லி முடியாது.

''ஃபார்கூவர் வந்தது முதல் அதே பேச்சாக இருக்கிறான். எமிலி சும்மா இருப்பதைக் கண்டு நான், 'உனக்கு எப்படித் தோன்றியது?' என்று கேட்டேன். அவள், 'அதைப் பார்த்து நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். ஆனால் ஒரு விஷயத்தைப் பற்றித்தான் வருந்தினேன்' என்றாள். 'அது என்ன விஷயம்?' என்றேன். 'அங்கிருந்த சித்திரம் ஒன்றைப் பார்த்ததும், எழுதிய புண்ணியவான்கள் எழுதினார்களே, காகிதத்தின் மீதோ, துணியின் மீதோ எழுதியிருக்கக் கூடாதோ? என்று நினைத்தேன். அப்படி எழுதியிருந்தால் விலை எத்தனையானாலும் கொடுத்து வாங்கிப் போகலாமே. பாறைகளின் மேல் எழுதியிருக்கிறார்கள். இப்போது நாம் யாரும் வாங்கிப் போக முடியாது' என்றாள். அந்த ஆசை அவ்வளவு கெடுதலாகப் படவில்லை. அந்த உற்சாகம் சரியானது தான் என்பதில் சந்தேகம் இல்லை. யார் பார்த்தாலும் இப்படி ஆசையைத் தோற்றுவிக்கும் சொருக அச்சித்திரங்களில் இருக்கிறது.

''அப்படிப் பேசிக் கொண்டிருந்தபோது என் டிவிஷனில் உள்ள கோயில்கள், பிரசித்தியான ஸ்தலங்கள் பற்றிய பேச்சு வந்தது. ஃபார்கூவர், 'உன் டிவிஷனில் 'மஹாமத்தி' என்னும் ஊர் இருக்கிறதாமே. அங்கே ஒரு வீட்டில் மிக நல்ல சித்திரங்கள் இருக்கின்றனவாம்' என்றான். விசாரித்ததில் பெயர் முதலிய எல்லா விவரங்களும் சொன்னான். கடைசியில், 'அவ்விடம் இருப்பவற்றுள் இரண்டொரு சித்திரங்களையாவது வாங்கிக் கொண்டு போக வேண்டும். நீ உதவி செய்வாயா?' என்று கேட்டான். இந்நாட்டின் பெருமையைப் பிறருக்கு விளக்கிச் சொல்லுகிறவனுக்கு எந்த உதவியையும் செய்யலாமென்றெண்ணிய நான், 'ஆகட்டும்' என்றேன்.

''நேற்று மஹாமத்திக்குப் போயிருந்தோம்.

''மஹாமத்தி ஒரு சிற்றூர். அழுக்காமல் ஊர் எவ்வளவு பாழாக முடியுமோ அவ்வளவு பாழாகி விட்டது. ஊருக்கு வெளியே அங்கும் இங்கும் வீடு கட்டிக் கொண்டு வசிப்பவர்களை விட்டால் ஊருக்குள் நாலைந்து வீடுகள் இருக்கலாம்; அவ்வளவுதான். அவர்கள் எல்லோரும் குடியானவர்கள். நான் சில நாட்களுக்கு முன் அங்கே போயிருந்தபோது ஒரு வீட்டின் திண்ணையின் மேல் ஒரு கிழவர் உட்கார்ந்திருந்தார். 'ஊர் ஏன் இப்படியாகி விட்டது?' என்று நான் கேட்டேன். இந்நாட்டு மக்களிடம் எப்படியோ உண்மையான அறிவு பரவியிருக்கிறது. இவர்களுடைய சாதாரணப் பேச்சிலும் தத்துவம் அடங்கியிருக்கிறது. உழவர்களும் ராஜதந்திரத்தை அறிந்திருக்கிறார்கள். இவர்களுடைய எளிய வாழ்க்கையிலும் அமைதி நிறைந்திருக்கிறது.

''ஊர் ஏன் இப்படியாகி விட்டது என்ற கேள்விக்குக் கிழவர், 'எல்லா ஊர்களும் இப்படி ஆகக் கூடியவையே!' என்றார். நான், 'ஏன், சில ஊர்கள் வளர்ந்து வருவதில்லையா?' என்றேன். கிழவர், 'வளரும் போது வளரும்; அழியும் போது அழியும்' என்றார். 'உங்கள் ஊர் வளர்ந்திருந்ததா?' என்று நான் கேட்டேன். கிழவர், 'பருவம் வராமல் முதுமை வந்து விடுமா?' என்றார். அப்படியே கேட்டுக் கொண்டு போனதில் இவ்வூர், புராணப் புகழ்பெற்ற மாஹிஷ்மதி நகரமென்றும் இங்கே கார்த்தவீரியார்ஜுனன் அரசனாக இருந்தானென்றும் அவர் சொன்னார். சமீப காலம் வரையில் பல குடும்பத்தினர் தலைவர்களாய் இருந்து பிறகு தாழ்ந்து கொண்டே வந்து கடைசியில் முஸல்மான்கள் படையெடுத்து வந்தபோது போரிட்டார்களென்றும் பிற்காலத்தில் நகரம் கிராமமாகி, முடிவில் இந்த நாலு வீடுகளே எஞ்சி நின்றனவென்றும் சொன்னார். மாஹிஷ்மதி எங்கே இந்தப் பட்டிக்காடு எங்கே? ஆனால் கிழவருக்கு அந்த விஷயத்தில் சந்தேகமே இல்லை.

அர்ஜுனன் தன் ஆயிரம் கைகளாலும் சிலம்பம் பழகுவதற்காக அமைத்த சிலம்பக் கூடம் என்று அவர், கல் மண்டபம் ஒன்றைக் காண்பித்தார். அவன் தினந்தோறும் நீராடப் போகும் புஷ்கரிணியைக் காண்பித்தார். தினமும் பூஜை செய்யும் கோயிலைக் காண்பித்தார். அவன் ராவணனைப் பிடித்துக் கொணர்ந்து கட்டிப் போட்டிருந்தானென்றும் ராவணனைக் காண்பித்து, 'இதோ பத்துத் தலைப் பூச்சி; இதை ஆடவைக்கிறேன் பாருங்கள்' என்று அவனைக் குதிக்கச் சொன்ன போது அவன் பேசாமல் இருந்ததால், அவனைப் பிடித்து ஓர் அடி கொடுக்க, அவன் எகிறிக் குதிக்க, வண்ண மண்டபத்தின் கல் முகட்டில் தலைகள் இடித்துப் பத்துக் குழிகள் விழுந்ததாகவும் அந்தக் குழிகள் இன்னும் இருப்பதாகவும் சொன்னார். இது இந்த நாட்டு மக்களின் பழக்கம். எந்தப் பட்டிக்காடும் மகாபுருஷர்களுக்கு ஏற்றதென்றே இவர்கள் கருதுகிறார்கள். தவிர, தேவாம்சம் பெற்ற மகான்கள் பூமியில் அவதரித்த நாட்கள் இம்மக்கள் மனத்திலிருந்து அழியவில்லை.

''நான் கிழவருடைய இப்பேச்சுக்களையெல்லாம் கேட்டு, இது வழக்கம்போல் பேசும் பேச்சு என்று நினைத்தேன். ஆனால் ஊர் சிறிது காலத்திற்கு முன் மிகப் பெரியதாக இருந்ததற்குப் பல அடையாளங்கள் இவ்வூரில் இருக்கின்றன. மேலே சொல்லிய மண்டபம் ஒன்று; வரிசைக்குப் பத்துக் கம்பங்கள் வீதம் பத்து வரிசைக் கம்பங்கள் உள்ள பெரிய கட்டிடம் இது. அவ்வளவாக உயரம் இல்லை. ஆனாலும் எவ்வளவு அகலமான கற்கள்! எத்தனை கனமாக இருந்திருக்கும்? இது மிகக் கெட்டிக்காரரான மனிதர்களின் வேலையென்று தோன்றுகிறது. புஷ்கரிணி பெரியது. சுமார் நூற்றைம்பது கஜ சதுரம் இருக்கிறது. கற்கள் எல்லாவற்றையும் ஒரேமாதிரி நயம் கொடுத்துச் செதுக்கி ஓரங்களைச் சமமாக உளியால் வெட்டிச் சேர்த்துப் படிகளைக் கட்டியிருக்கிறார்கள். இது தொழிலில் அக்கறை கொண்டவர் வேலையாகத் தோன்றுகிறது. அழகான கட்டிடத்தால் ஏற்படும்

இன்பத்தை உணர்ந்தவர்களின் வேலை. இப்பொழுதுதான் மேற்புறத்துப் படிகளில் செடி செத்தைகள் முளைத்துக் கற்கள் ஆடுகின்றன. ஆனால் கீழ்ப்புறம் உள்ள கற்கள் உறுதியாக இருக்கின்றன. இப்பொழுதும் குளத்தின் நீர், நாலுபுறமும் ஒரே மட்டத்தில் அமைவதற்கு அவர்கள் எவ்வளவு பாடுபட்டிருப்பார்கள்? அப்புறம் இந்தக் கோயில். கிரேக்க விக்கிரகங்களின் இயற்கைத் தன்மையையும் நம் நாட்டுக் கட்டிடங்களின் ராஜ கம்பீரத்தையும் பார்த்த கண்ணுக்கு இவ்விடத்து விக்கிரகங்களின் விசித்திரமான தன்மையும் கட்டிடங்களின் எளிய அமைப்பும் அவ்வளவு சிறப்பாகத் தோன்று. ஆனாலும் கட்டிடங்களின் பொதுப் பாவம், சரியாக இருப்பது போலவே தெரிகிறது. இந்தக் கோயிலில் எல்லா வேலைகளும் நயமாக இருக்கின்றன. பலகைக் கற்களை ஜோடித்துச் சுவரை எழுப்பியிருக்கிறார்கள். ஜோடித்திருக்கும் வரிசைகள் நாலுபுறத்திலும் ஒரே மட்டத்தில இருக்கின்றன. இதிலும் சில பகுதிகள் தகர்ந்து வருகின்றன. கோயிலில் ஒரு விக்கிரகந்தான் இருக்கிறது. ஆனால் வெகு நாட்களாகப் பூஜை இல்லை. மேலும் இது பெரிய ஊராக இருந்தது என்பதற்கு நெடுகிலும் பாழ் வீடுகள் வரிசையாக இருக்கின்றன. ஒன்றை வண்ணார் தெருவென்றும் மற்றொன்றைத் தாசித் தெருவென்றும் இன்னொன்றைச் செம்படவர் தெரு என்றும் வேறொன்றை அக்கிரகாரமென்றும் ஏழெட்டுத் தெருக்களின் அடையாளங்களைக் கிழவர் காண்பித்தார். எல்லாம் சூனியம். அங்கங்கே குட்டிச் சுவர்கள் மட்டுமே இருந்தன. எல்லாவற்றையும் பார்த்து விட்டுத் திரும்பினேன்.

"நேற்று மலைமத்திக்குப் போய் விசாரித்ததில், சித்திரங்கள் இருக்கும் வீடு அந்தக் கிழவருடையது தான் என்று தெரிந்தது. நாங்கள் போய்க் கிழவருக்குச் சொல்லி அனுப்பினோம். கிழவர் வெளியே வந்து வணக்கம் செய்து, 'வர வேண்டும்... வர வேண்டும்...' என்றார். இந்த மக்களின் மரியாதையே மரியாதை. கிழவருடைய நடையுடை பாவனைகளில், கூடவே பிறந்த பெருந்தன்மை காணப்பட்டது.

''ஃபார்க்கூவர், ''கிருஷ்ணையா என்பவர் நீர்தாமோ?'' என்று கேட்டான்.

''ஆம், துரையே.''

''தங்களிடம் சிறிது வேலை இருக்கிறது. அதற்காக வந்தோம்.''

''உத்தரவாக வேண்டும்.''

''உங்களிடம் பழங்காலத்துச் சித்திரங்கள் நிறைய இருக்கின்றனவாம். அவைகளைப் பார்க்க வேண்டுமென்று வந்திருக்கிறோம்.''

''அப்படியொன்றும் அதிகமாக இல்லை.''

''இருப்பவற்றைக் காண்பித்தால் போதும்.''

''ஆகட்டும் வாருங்கள்.''

''நாங்கள் போய்க் கூடத்தில் உட்கார்ந்தோம்.''

''கிழவர் உள்ளே சென்று சில படங்களைக் கொண்டு வந்து எங்கள் அருகே வைத்தார்.

(அடுத்த இதழில் முடியும்)

---



## அறுவை ஒரு கப்!

● ''டாக்டர் கைராசிக்காரரா?''
''இல்லை விருச்சிக ராசிக்காரர்.''

● ''ஒலிம்பிக்ஸ்ல ஹாக்கில இந்தியா கோல்டு மெடல் வாங்க ஒரு வழி.''
''என்ன?''
''பேசாம இங்கேயே மெடல் பண்ணி கைல கொண்டு போயிடலாம்.''

● ''பட்டோடி டெஸ்ட்ல ரன் எடுக்க என்ன பண்ணுவார் தெரியுமா?''
''என்ன பண்ணுவார்?''
''இது கூடவா தெரியாது? பந்தை ஓங்கி அடிச்சுட்டு ஓடுவார்.''

● ''ஒரு ஜோக் சொல்லு.''
''சிரிப்பு வர மாதிரியா எரிச்சல் வர மாதிரியா?''

● ''உன் போன் நம்பர் தெரியாம நேத்து ரொம்ப கஷ்டப்பட்டுட்டேன்.''
''ஐயையே! ஒரு போன் அடிச்சுக் கேட்டிருந்தா சொல்லியிருப்பேனே!''

● ''பரவாயில்லையே! 'சூப்பர் ஸ்டூடெண்ட்'னு ரிமார்க் எழுதியிருக்காங்களே புரோகிரஸ் ரிப்போர்ட்ல!''
''நீங்க ஒண்ணு! விரல் சூப்பற ஸ்டூடெண்ட்டுன்னு எழுதியிருக்காங்க''

● ''ரிங் மாஸ்டர் பொண்டாட்டின்னு பேரு! போட்டுக்க ஒரு மோதிரம் உண்டா?''

● ''எனக்கு தமிழ் சரியா வராதுங்க...''
''அப்ப நீங்க டீவி டிராமால நடிக்கலாமே!''

● ''ரோடுல மாட்டு வண்டி போகுது. எதிரே வேகமா பிரேக் இல்லாம ஒரு லாரி. என்ன நடக்கும்?''
''சந்தேகமென்ன? மாடு தான் நடக்கும்.''

-எஸ். சந்திரமௌலி



○ டாக்டர் காமேஸ்வரன்



# உங்கள் மூக்கு



குதிரைப் பந்தயப்பிரியர்களைப் பலநேரங்களில் எரிச்சல் அடைய வைக்கிற ஓர் உறுப்பு உண்டென்றால் அது குதிரைகளின் மூக்குத்தான். இவர்கள் பணம் கட்டாத எந்தக் 'கழுதை'யாவது வின்னிங் போஸ்ட்டில் மூக்கைநீட்டிக் காரியத்தைக் கெடுத்து விடும். அனுவசியமாகப் பிறருடைய விஷயங்களில் தலையிடுகிறவர்களையும் 'மூக்கை நீட்டாதே' என்று சொல்வதுண்டு. பல பேருக்குப் பல விஷயங்களில் மூக்கு 'உடைபடுவதும்' சாதாரணமானது தான். நிக்ஸன் மூக்கு, இந்திரா காந்தி மூக்கு, ராஜாஜி மூக்கு, என்று பிரபலமானவர்களைச் சுலபமாகக் கார்ட்டூன் படம் போட்டுக்காட்ட உதவுவதும் இந்த மூக்குதான்.

இவ்வளவு புகழ்வாய்ந்த உறுப்பைப் பற்றி மருத்துவக்கண்ணோட்டத்தில் கவனிக்கலாமே என்று டாக்டர் எஸ். காமேஸ்வரன் அவர்களை அணுகினோம். மூக்கில் விரல் வைத்து வியக்கிற அளவுக்கு ஏராளமான தகவல்களைச் சொன்னார் டாக்டர்.

மங்கோலியன், நீக்ராயிட், காக்கேஷியன் என்று மனித இனத்தை மூன்று வகையாக அடையாளம் காட்டுவது முதல் தொடங்குகிறது மூக்கின் கதை. அளவான எடுப்பான நாசி அமைப்பு உடைய நாம் காக்கேஷியன் இனம். கொழுக்கட்டை மாதிரியான மூக்கு அமைப்புடையவர்கள் நீக்ராயிட். சின்னக் கண்களும் தட்டையான மூக்குமாய் உள்ளவர்கள் மங்கோலியன் இனம். இந்த மூன்று வகையினருக்குமே, அவர்கள் வாழ்கின்ற பகுதிகளின் தட்பவெப்ப அடிப்படை தான் இந்த உறுப்பு அமைப்புக்கும் காரணம்.

நோய்களும் இந்த அமைப்புக்கு ஏற்ற மாதிரியே வரக்கூடுமாம். பதினைந்து முதல் இருபது வயதுப் பெண்களுக்கு மூக்குத்துவாரத்திலிருந்து பச்சை நிறத்தில் நிப்பி நிப்பியாய்வெளி வரும். தென் மாவட்டங்களில் 'பீனிசம்' என்று சொல்வார்கள். 'அட்ரபி' என்கிற சளிச்சவ்வுகெட்டுப் பட்டு மூக்குத் துவாரத்தில் அடைத்துக் கொள்வதால் ஏற்படுவது — இது. இது போன்ற நோய் மூக்கு அகலமான நீக்ரோக்களுக்கு வருவதில்லை. சப்பையான மூக்கமைப்புடைய மங்கோலிய இனத்தவருக்கு மூக்குத் தண்டின் பின்புறப் பகுதியில் புற்றுநோய் ஏற்படக் கூடும்.

மூக்கின் ஒரே வேலை, நுரையீரலுக்குத் தேவையான காற்றை ஒழுங்குபடுத்தி உள்ளே அனுப்பி வெளியேற்றுவது மட்டும் தான். 'மூக்க விடுவது' என்று சட்டென்று சொல்லி விடலாம்.

மூக்குத் துளையின் முன்புறத்தில் உள்ள உரோமங்கள் காற்றை வடிகட்டி அனுப்புகின்றன என்பது எல்லோருக்குமே தெரியும். இதையும் மீறி உள்ளே போகிற தூசு.




1. வளைவு
2. காற்றுக் குழாய் வழி
3. காற்றுக் குழாய் வழி
4. மேல் உதடு
5. கீழ் உதடு
6. நாக்கு

தும்புகள்? 'மியூக்கஸ் மெம்பிரேன்' என்று ஓர் அற்புதமான பகுதி இருக்கிறது. சளிச்சவ்வு என்பார்கள். மிகவும் தனித்தன்மை வாய்ந்த செல்களால் ஆனது இது. மூளை, இருதய செல்கள் மாதிரி இதுவும் மாற்ற முடியாதது. பாழாயிற்று என்றால் அவ்வளவு தான்.

சின்னச் சின்ன உரோமங்கள் மாதிரி நுட்பமான செல்கள் அணிவகுத்து நிற்கிற படைவீரர்கள் வரிசையாய் இருக்கும். இவற்றின் மீது போர்வை விரித்த மாதிரி ஜவ்வுப் படலம். இது மேல் நோக்கி அலையலையாய் அசையக் கூடியது. தூசு, கிருமிகள் என்று எது நுழைந்தாலும் அப்படியே பிடித்திழுத்து மேல் நோக்கி நகர்த்திக் கொண்டே தொண்டைக்கு இழுத்துச் சென்று விடுகிறது. அப்பொழுது நாம் காறி வெளியே உமிழ்ந்து விடுகிறோம்.

மூக்கின் மேல்புறத்தில் அமைந்துள்ளது சைனஸ். இது இடைவெளியுடைய எலும்புப் பகுதி. மூக்குத் துவாரம் வழியாக உள்ளே வருகிற காற்று சுழன்று சுழன்று வரும். இந்த சைனஸ் எலும்பு இடைவெளியிலும் புகுந்து வந்தால் தான் சரியான சுழற்சி கிடைக்கிறது. இந்த எலும்பு இடைவெளியில் நோய்க் கிருமிகள் தொற்றிச் சீழ் கோத்துக் கொள்வது தான் சைனஸ் தொந்தரவு எனப்படுகிறது.

மூக்கின் மேல் தண்டுக்கும், சுவர்ப் பகுதிக்கும் இடையில் ஒரு சாதாரணத் தபால் தலை அளவுள்ள பரப்புத்தான், ''ஆஹா! காபி எவ்வளவு ஜோர்'', ''ரசம் ஏ. ஒன்'' என்று சொல்லத் தூண்டுகிற வாசனையை உணரும் பகுதி. சுழன்று உள் வருகிற காற்று இந்தப் பகுதியில் மோதுகிற போது தான் அது சுமந்து வருகிற மணம் நமக்கு உறைக்கிறது. பிடித்தமான வாசனையை ரசிக்கிற போது காற்றைச் சற்று அழுத்தியே உள்ளிழுப்போம். இந்த ஸ்டாம்பு அளவுப் பகுதியின் தயவு அப்போது அதிகமாகக் கிடைக்கிறது.

வாசனை பாதி ருசி என்று ஒரு வழக்கே உண்டு. ஒரு மனிதனின் மூக்கையும், கண்களையும் கட்டிவிட்டு அவனுடைய வாயில் தக்காளிப் பழத் துண்டையும், பேரித் துண்டையும் தனித் தனியே போட்டுச் சுவைக்கச் சொன்னார்கள். அவனுக்கு எது தக்காளி, எது பேரி என்று சொல்லத் தெரியவில்லை. வாசனையை உணர முடியாதபடி செய்துவிட்டபடியால் ஏற்பட்டது இது.

மூக்கு ஒரு ஏர் கண்டிஷனர் மாதிரியும் செயல்படுகிறது. புறக் காற்றின் வெப்பம் 45° சென்டிகிரேடு ஆக இருந்தாலும் சரி, பனிக்காற்றின் 0° சென்டிகிரேடு ஆக இருந்தாலும் சரி, மூக்குப்பாதை வழியே போகிற காற்று நுரையீரலை அடைகிற போது உடல் வெப்ப அளவான 37°C -க்குக் கட்டுப்படுத்தப்பட்டாக வேண்டும். இல்லாவிட்டால் நுரையீரல் அதை ஏற்காது. இந்த 'ஏ. ஸி.', 'மியூக்கஸ்மெம்ப்ரேன்' அடியில் இயங்குகிறது. சின்னச் சின்ன இரத்தக் குழாய்களால் அமைந்துள்ள இந்த வித்தையான பகுதியில் இரத்தம் கூடியோ, குறைந்தோ பாய்ச்சப்பட்டுக் காற்றின் வெப்பம் ஒழுங்குபடுத்தப்படுகிறது.

அப்புறம், வறண்டபகுதிகளில் இருக்க நேர்ந்தாலும் உள்ளே போகிற காற்று ஈரப்பதம் உள்ளதாகவும் இருக்க வேண்டும். இதையும் கவனித்துக் கொள்வது மூக்குத்தான்.

இத்தனை நுட்பமான மூக்கு, மிகவும் கவனமாகப் பாதுகாக்கப்பட வேண்டிய ஒன்று; கண் மாதிரி. நெடி மிகுந்த அமிலங்கள், வீரியம் அதிகமுள்ள இன்ஹேலர்கள் போன்றவையே நுட்பமான பகுதிகளைச் சிதைத்துக் கெடுத்து விடும் என்றால், புகையிலைக் காரத்தைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

---



## உரிமையா, கடமையா?

எச். ஜி. வெல்ஸ், பெர்னட் ஷா, மற்றும் சிலருமாகச் சேர்ந்து ''மனிதனின் உரிமைகள்'' என்று ஒரு பத்திரம் எழுதி முக்கியமான அரசியல் தலைவர்களுக்கெல்லாம் நகல் அனுப்பி அவர்களின் கருத்தைத் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டனர்.

காந்தி, அதற்கு உடனே பதில் எழுதியிருந்தார்:

அன்புள்ள மிஸ்டர் வெல்ஸ்,

வாழ்க்கையைக் கூர்ந்து கவனிப்பவன் நான். முதலில் என் மனைவி குழந்தைகளிடம் அதிகார பூர்வமாக என் உரிமைகளை நிலைநாட்டிவந்தேன். என்னுடைய கோரிக்கைகள் அதிகமாக ஆக, அவர்களும் தங்களின் உரிமைகளைக் கோர ஆரம்பித்தனர். இதனால் எங்களிடையே வேற்றுமையும் முரண்பாடும் தலைதூக்க ஆரம்பித்தது.

அதற்குப் பின் நான் என் உரிமைகளைக் கேட்காமல், என் கடமைகளை — கணவனாக, தந்தையாக—செய்யத் தலைப்பட்டேன். அவர்களும் தங்கள் கடமைகளைச் செய்யலாயினர்.

—ஜெயா. வி. ராமன்.

## மூன்றும் இணைந்தவர்

அழகு, எளிமை, திறமை — மூன்றும் இணைந்தவர் குமாரி ஜெயந்தி. அட்டைப் படத்தில் இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா என்பது போல் காட்சி யளிக்கின்றாரே தவிர, இந்தப் பட்டதாரி, பத்திரிகைத் துறையிலும் சிறப்புப் பயிற்சி பெற்று இன்று ஒரு தனியார் நிறுவனத்தில் வேலையில் இருந்தபடியே மலர் அலங்காரத்திலும், பொம்மைகள் தயாரிப்பதிலும் ஓய்வுநேரத்தில் ஈடுபடுகிறார். மேற்கத்திய பாப் சங்கீதம் பாடி ஜமாய்க்கிறார் என்றால், மீரா பஜன்களிலும் அதே அளவு ஈடுபாடு! சமையலை ருசி பார்த்தவர்களுக்கல்லவா தெரியும் இவர் அருமை! இவ்வளவும் போதாதென்று ஓவியம் தீட்டுவதிலும்




நாட்டம். லேட்டஸ்ட் பெயிண்டிங்: மலைச் சாரல்.

தகவல்: சிக்கி

மேலட்டை வண்ணப்படம்: உத்ரா

இனி, இந்த உறுப்பு நமக்குத் தருகிற தொந்தரவுகள் என்னென்ன, என்று பார்க்கலாம். சாதாரண ஜலதோஷம், இது வைரஸ்கிருமிகளால் வருகிற சமாச்சாரம். மழையில் நனைந்தாலும் பனியில் அலைந்தாலும் ஜலதோஷம் பிடிக்காமலிருக்கும்; இப்படியெல்லாம் அலையாமல் பத்திரமாக இருந்தாலும் கூட இந்த நோய் வந்துவிடும். பனியும் மழையும் காரணமில்லை, வைரஸ் கிருமி உள்ளே புகுந்து விடுவது தான் காரணம். 72 மணிநேரம் நீடிக்கிற நோய்தான் 'குணப்படுத்தப்படுகிற ஜலதோஷம் 72 மணி நேரத்திலும், அப்படியே விட்டு விடுகிற ஜலதோஷம் மூன்று நாட்களிலும் 'குணமாகிவிடும்' என்பார்கள்.

ஜலதோஷம் பிடிக்கும் போது மூக்கு மட்டும் இல்லை; சைனஸ் பகுதியும் சேர்ந்தே தான் பாதிக்கப்படுகிறது. மூன்று நாளில் ஜலதோஷம் பறந்தோடுகிற போது சைனஸ் பகுதியை விட்டும் வெளியேறிவிடும். ஆனால்—

மூக்கு அமைப்பில், உட்புறம் சிலருக்குஇயற்கையாக உள்ள வளைவு, பள்ளங்களில் கிருமிகள் தேங்கி சீழ் வைத்து விடக் கூடும். இந்த மாதிரிஅமைப்புடையவர்களுக்கே சைனஸ் தொல்லை தருகிறது. உடலில் எந்தப் பகுதியில் சீழ் சேர்ந்தாலும் அதை முதலில் அகற்றியாகவேண்டும். சீழ் அகற்றப்பட்ட பிறகு தான் மருந்து தர வேண்டும். இல்லாவிட்டால் மருந்துகள் பயன் தராது.

மூக்கிலிருந்து இரத்தம் கசிவது ஒரு நோய். ஆனால் 'மிரள' அவசியமில்லாதது. கட்டுப்படுத்தி விடக் கூடிய நோய்தான்.

அடிபட்டு சதையில் நீர் கசிந்து உராய்வு ஏற்படுவதால், தோல் உரிந்து இரத்தம் வரும். எட்டு வயதுக் குழந்தைகளுக்கு ஏற்படக் கூடியது இது. பதினெட்டு வயதுப் பெண்களுக்கு மூக்கில் இரத்தம் கசியக் கூடும். மாத விலக்கு காலங்களில் ஹார்மோன்களின் விளைவால் ஏற்படுவது இது. 25 – 26 வயதுள்ளவர்களுக்கு, வளைவான மூக்குத் தண்டுப் பகுதியில் காற்று உராய்வதால் இரத்தம் வரலாம். அபரிமிதமான வெப்பத்தில் வேலை செய்கிற போதும், கடுமையான குளிரில் இருந்தாலும் மூக்கில் இரத்தக் கசிவு ஏற்படலாம். இந்த மாதிரி இரத்தக் கசிவு ஏற்படுகிற பகுதியில் (லிட்டில்ஸ் ஏரியா) வலி தெரியாமல் மருந்து தடவி, 'காட்டரேஜ்' செய்து கசிவை நிறுத்துவார்கள். சின்னதான மின்சாரக்கருவியால் இரத்தக் கசிவுப் பகுதியைத் தொட்டுத் தீய்த்து விடுவது தான் காட்டரேஜ் என்பது.

ஐம்பது ஐம்பத்தைந்து வயதானவர்களுக்கு மூக்கில் இரத்தம் வந்தால் அது இரத்த அழுத்தம் அல்லது புற்று நோய் போன்றவற்றின் அடையாளமாகக் கூட இருக்கலாம். மற்றபடி இருபது— இருபத்தைந்து வயதில் தலைவலி, மூக்கடைப்பு இவை அதிகமாக இருக்குமானால் 'சைனஸ்' நோய் காரணமாக இருக்கலாம்.

மூக்கு பாதிக்கப்படுகிற மற்றொரு நோய் ஒவ்வாமை என்கிற அலர்ஜி. மகரந்தத் தூள் மாதிரி நுண்பொருள்கள் உட்புகுந்து மியூக்கஸ் மெம்பிரேன் பகுதியில், பாக்டீரியாக்களைச் சண்டை போட வைத்து விடும். அப்போது ஹிஸ்டமின் என்கிற இரசாயனப் பொருள் சுரக்கும். இதுதான் 'அலர்ஜி' ஏற்படக் காரணம். தும்மல், மூக்கடைப்பு, மட்டுமின்றி, உடம்பிலும் ஆங்காங்கு தடிப்புக்கள் ஏற்படலாம். உணவில் புரதச் சத்துக்கள் தான் அலர்ஜியை உண்டாக்கும். அரிசி போன்ற 'கார்போஹைட்ரேட்' அல்ல. தூசுகள் கிளம்பி, நாசியில் அரிப்பேற்படுத்தி, 'அலர்ஜி' பிடிக்கப்படுகிற பலர் பத்து இருபது, ஐம்பது என்று தும்மிக் கொண்டே இருப்பார்கள். இதனால் வீக்கம் அதிகமாகிச் சதை கூடத் தொங்க ஆரம்பித்துவிடும். அவில் போன்ற ஹிஸ்டமின் எதிர்ப்பு மருந்துகள் அலர்ஜிக்குக் குணம் தருகின்றன.

கட்டுரை வடிவம்: 'சுப்ரபாலன்'

மாணவ்-கல்யாண் வருகிறது! பரிசு மழை பொழிகிறது!!

# ஒரே குலுக்கலில் 125 லட்சாதிபதிகள்



இந்தியன் கேன்ஸர் ஸொஸைடி

## மாணவ்-கல்யாண் சூப்பர் பம்பர்



குலுக்கல் 15.7.84 5 வரிசைகள்

லட்ச ரூபாய் வீதம் 125 முதல் பரிசுகள்

டிக்கட் விலை ரூ.1/-

இரண்டாம் பரிசு (10) ரூ.50 ஆயிரம்

மூன்றும் பரிசு (100) ரூ.10 ஆயிரம்

TAM8

ஆர்கனைசிங் ஏஜெண்ட்:
ஜாஸ்மின் & கோ
புது டில்லி-110 001.

தென்மாநில டிஸ்டிரிபுயுட்டர்கள்
ஸ்வஸ்திக் டிஸ்டிரிபுயுட்டர்ஸ்
சென்னை-600 001.

எண்ணற்ற பரிசுகள்! ஏராளமான வாய்ப்புகள்!!

சந்தேக விளக்கம்

# தன்னை அடக்கும் தண்டம்



✕ ஆண்டவன் சுவாமிகள்

**திருச்சி என். இராஜேந்திரன் கேட்டிருந்தார், 'காஞ்சி ஆசார்ய சுவாமிகள் மூவரும், ஸ்ரீரங்கம் ஜீயரும், சிறிய துணி கட்டிய நீண்ட கம்புடன் வீற்றிருக்கிறார்களே, அதன் பெயர் விவரங்கள், என்ன?' என்று. திரு. ரா. கணபதி விளக்குகிறார்.**

அடங்கினால் தான் சான்றோனாகவே இருக்க முடியும். திமிருகிற வரை எல்லாமே சங்கடம்தான்.

ஆசிரியர் மாணவனை அடக்கக் கையில் பிரம்பு வைத்திருப்பார் என்பது பழைய கால சமாசாரம். அரசனுக்கும் மக்களை அடக்கி யாளுகிற அதிகாரச் சின்னமாகச் செங்கோல் என்று ஒன்று இருந்தது. இவையும் தண்டம் என்பது தான். ஆங்கிலத்தில் செங்கோலை Sceptre என்பார்கள்.

அரசனுக்கு 'தண்டதரன்' என்று ஒரு பெயர் உண்டு. தண்ட நீதி, தண்டனை என்பதெல்லாம் செங்கோல் என்கிற 'ராஜ தண்டத்'தின் பேரால் ஏற்பட்டவை. அரசனின் சார்பாக வரி வசூல் செய்கிற அதிகாரிக்கும் தண்டல்காரன் என்பது பெயர்.

ஆசிரியர் தண்டமும், அரசனின் தண்டமும் மற்றவர்களை அடக்க, கட்டுப்படுத்த ஏற்பட்டவை. தன்னையே அடக்கி ஆண்டு கொள்கிற ஞானிகள், பிரும்மசாரிகளுக்கு ஏற்பட்டது தான் இந்தக் கையில் வைத்திருக்கிற துணி முடிச்சோடு கூடிய தண்டம். பிரும்மசாரிக்குப் புரசு (பலாசம்) முதலான தண்டங்கள் விதிக்கப்பட்டுள்ளன. அவர்கள் அப்யசிக்கும் வேதங்களைத் தன்னுள் இழுத்துப் பொதிந்து கொண்டு காத்து அருள்வதாக ஒரு நம்பிக்கை.

சன்யாசியின் தண்டம் கல்மூங்கிலால் ஆனது. உள்ளே கூடாக இல்லாமல் Solid ஆக உள்ள கல் மூங்கில்கள் கூட ஆற்காட்டிலும், காஞ்சி கடலாடி மலைப்பகுதிகளிலும் கிடைக்கின்றன.

சன்யாச தண்டங்களில் கூட த்ரிதண்டம் ஏக தண்டம் என்று உண்டு. மூன்று கழிகளை ஒன்றாகப் பிணைத்து வைத்துக் கொள்ளும் த்ரிதண்டி சன்யாசிகளைப் பற்றிச் சங்க காலம் தொட்டே குறிப்புண்டு. இவர்களை 'முக்கோல் வேந்தர்' என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஸ்ரீமத் பாகவதப்படி, அர்ஜுனன், சுபத்திரையிடம் கபட சன்யாசியாகப் போனது திரிதண்டிக் கோலத்தில் தான்.

மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றையும் அடக்கி மரத்துப் போன நிலையை வலியுறுத்தவே இந்த மூன்று கழிகளைத் தாங்குவது. ஸ்ரீ ராமானுஜ சம்பிரதாய வைணவத் துறவிகள் த்ரிதண்டிகளே.

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் மனம் ஒன்றை மட்டும் அடக்கி விட்டாலே, வாக்கும், காயமும் வசப்படுத்தி விடலாம் என்ற கருத்தில் ஏகதண்டம் தாங்கினார். தன்னுடைய சம்பிரதாயத் துறவிகளுக்கும் ஏகதண்டம் ஏற்படுத்தினார். இது அவருடைய அ-த்வைதக்கொள்கைக்கும் பொருத்தமே.

தண்டம் தாங்கும் துறவிகள் உணர்ச்சி மரத்துப் போய் ஜடம் போல ஆகிவிட வேண்டும். இதை வைத்துத்தான் காரிய உலகுக்குப் பயன் படாத எதையும், எவரையும் ''அது வெறும் தண்டம்... அவன் வெறும் தண்டம்'' என்கிற வழக்கு ஏற்பட்டது.

மற்றவர்களின் — மான— அவமான உணர்ச்சிகளை மதித்து, ஒரு துறவி தன்னுடைய ஒரே உடைமையாக வைத்துக் கொள்வதற்கு அனுமதிக்கப்பட்ட கௌபீனம் தான் இந்தத் தண்டங்களின் மேலே முடிச்சாகச் சுற்றப்பட்டுள்ள துணி. இது இந்திரிய நிக்ரஹத்தின் அடையாளமும் ஆகும்.

பேட்டி: நிருபர்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani    Editor: K. Rajendran

